# உங்கள் மகனின் கனவை நனவாக்குங்கள்






உங்கள் மகன் பெரியவனானதும் எந்தத் தொழில் செய்யப்போகிறான்? என்ஜினியரா? கட்டடக்கலைஞரா? டாக்டரா? வக்கீலா? எதுவானாலும் சரி அதற்கு ஏராளமாகப் பணம் தேவை. அவனது எதிர்காலத்திற்கென்று பணம் சேமித்து வருகிறீர்களா? யூகோ பாங்கில் சேமித்து வாருங்கள்; உங்கள் பணம் பெருகிக் கொண்டே போகும்.

**யூகோ பாங்க்**
**வளம் பெற வழி**
**வகுத்தளிக்கின்றது**




தலைமை அலுவலகம் : கல்கத்தா

UCO-3/73,

மங்களகரமான நமது மகத்தான மரபு
மங்காது பொலிக அன்றுபோல்-இன்றும்.
சிறப்புடன் தரிப்பீர் சிங்கார் கும்கும்
சிங்கார் கும்கும்-பாரத நாட்டின் பேரழகு திலகம்

உடையழகுக்கும் உளகிலக்கும் பொருந்தியமையும்...
சொக்குமழகுள்ள 15 சாயல்கள்.



பாரமவுண்ட்
பிராடக்ட்ஸ்,
பம்பாய்-400 004.

சிங்கார்



everest/596/SP-tm

# மலர் குலுங்கும் மாயப் பூங்கா

சேலைகளிலே பூஞ் சோலைகள்--அழகு
மலருகிறது உங்களுக்காக, சோபிக்கும்
ஒளிவர்ணங்களிலே! பளிச்சிடும்
செங்கமல வர்ணப் பின்னணியிலே
காந்தலான ஆரஞ்சு நிற மலர்கள்.
டெரிகோஸா இழைகெசவிலே
'ஃபூல் மாலா' சேலைகளின் வரிசை--
ஈடிணையற்ற கட்டாவ் படைப்பு'



**கட்டாவ்**
**டெரிகோஸா**

100%'டெரீன்' சேலைகள்

Creative Unit-803-*Tum*.

சில்லறை விற்பனை நிலையங்கள் : 216, நேத்தாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு, சென்னை-600001
2/133, மவுண்ட் ரோடு, சென்னை - 600006

# கல்கி பொருளடக்கம்

பிரமாதீச, ஆவணி 10 - ஆகஸ்டு 26, 1973





## சிறுகதைச் சிறப்பிதழ்

''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

அட்டையில் :

டென்னிஸ் வீராங்கனைக்கு வெற்றிக் கோப்பை

வண்ணப்படம் :

எஸ். வி. சேகர்

# உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்கு வைடமின்களும், தாதுப் பொருள்களும் இன்றியமையாதவை.

அவை போதுமான அளவில் கிடைக்கின்றனவா?



வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின் பற்றுக்குறை உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்தைப் பாதிக்கக்கூடும். சோர்வு, ஜலதோஷம், பசியின்மை, உடல் இளைத்துப்போதல், சரும உபாதைகள், மற்றும் பல் உபாதைகள். இவற்றிற்கு மூலகாரணம் சாதாரணமாக, இன்றியமையாத வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின் பற்றுக்குறைதான். இருப்பினும், வைடமின்களும், தாதுப் பொருள்களும் பெரும்பாலும் அலட்சியம் செய்யப்படுகின்றன. மிகவும் கவனமாகத் திட்டமிடப்பட்ட உணவில் கூட இவற்றின் பற்றுக்குறை காணப்படுகிறது. வளமான உணவு எல்லாம் சரிவிகித உணவாக இருப்பதில்லை; விதவிதமான உணவுகளிலும், வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின் பற்றுக்குறை இருக்கக் கூடும். அப்படியானால், அத்தியாவசியமான வைடமின்களும், தாதுப் பொருள்களும் – அதுவும் சரியான விகிதங்களில் – உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கின்றன என்று நிச்சயமாக எப்படிச் சொல்ல முடியும்?

உங்கள் குடும்பத்தில் ஒவ்வொருவருக்கும், தேவையான அளவுகளில் இந்த இன்றியமையாத போஷாக்குச் சத்துக்கள் கிடைப்பதை உறுதிப் படுத்திக் கொள்ள, அவர்களுக்கு விம்க்ரான் – ஸ்க்விப் பல்வேறு வைட்டமின், தாதுச் சத்து மாத்திரைகள் – கொடுங்கள், தினம் ஒரு மாத்திரை வீதம். இந்த ஆரோக்கியமான வழக்கத்தை இன்றே ஏன் ஆரம்பிக்கக்கூடாது?

விம்க்ரானில் 11 முக்கியமான வைடமின்களும், 8 தாதுப் பொருள்களும் சரியான அளவுகளில் அடங்கியிருக்கின்றன. இரத்தச் சிவப்பு உயிரணுக்களை வளர்க்கவும், சக்தியை மீண்டும் பெற உதவவும் இரும்புச் சத்து – எலும்புகளையும், பற்களையும் உறுதியாக வைத்திருக்க கால்ஷியம் – ஜலதோஷத்தை எதிர்க்கும் சக்தியை அதிகரிக்க வைடமின் ஸி – சிறந்த கண் பார்வைக்கும், ஆரோக்கியமான சருமத்திற்கும் வைடமின் ஏ – பசியைத் தூண்டி, தாங்கும் சக்தியை அதிகரிக்கும் வைடமின் பி – 12 – இவற்றுடன், உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்குத் தேவையான, இதர போஷாக்குச் சத்துக்களும் அடங்கியிருக்கின்றன.

# விம்க்ரான்®

பல்வேறு வைட்டமின் - தாதுச் சத்து மாத்திரைகள்

## 11 வைட்டமின்களும் 8 தாதுப் பொருள்களும் அடங்கியது.

**ஒரே ஒரு விம்க்ரான் மாத்திரை உங்களை நாள் முழுதும் சக்தியுடன் வைத்திருக்கப் போதுமானது.**

SQUIBB SARABHAI CHEMICALS

Shilpi HPMA-25A/71 Tam



கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா --பாரதியார்

மலர் 33 :: இதழ் 4

# ஓய்வு கொடுப்போம்!

தொழில் துறையில் அடுத்த மூன்றாண்டுகாலத்துக்கு வேலைநிறுத்தமும், கதவடைப்பும் செய்வதில்லை என்று எல்லோரும் உறுதி கொண்டால்தான் இப்போதுள்ள நெருக்கடியான பொருளாதார நிலைமையை ஒருவாறு சமாளிக்க முடியும் என்று சுதந்திர தினச் செய்தியில் ராஷ்டிரபதி வி. வி. கிரி எச்சரிக்கை செய்திருக்கிறார். தொழிலாளர் இயக்கத்துடன் நீண்ட நாளைய தொடர்பு உள்ளவர் நமது குடியரசுத் தலைவர். தொழிலாளர்களின் உண்மை நலனுக்காகவும் உரிமைக்காகவும் நீண்ட காலம் பாடுபட்டுத் தொழிலாளர்களின் தோழர் என்று எல்லோரும் கருதும் அளவுக்கு அனுபவமும் அனுதாபமும் உள்ளவர். ஆகவே ராஷ்டிரபதி என்ற முறையில் மட்டுமின்றித் தொழிலாளரின் உற்ற நண்பர் என்ற முறையிலும் இத்தகைய எச்சரிக்கை விடுப்பதற்கு அவர் முற்றிலும் தகுதி உள்ளவர். அவருடைய அறிவுரையைத் தொழிலாளர் இயக்கம் நடத்தும் தலைவர்களும், சங்கங்களும் வரவேற்க வேண்டும்; செயல்படுத்த வேண்டும். கதவடைப்பு நடவடிக்கைகள் பொதுவாக வேலைநிறுத்தத்தை யொட்டித்தான் நிகழுகின்றன. முதல் நடவடிக்கையாக ஏற்படுவதில்லை. ஆகவேதான் இவ்வெச்சரிக்கையைத் தொழிற் சங்கங்களும் தொழிலாளர் தலைவர்களும் ஆழ்ந்து சிந்தனை செய்வது நல்லது. உற்பத்தி எந்தக் காரணத்தைக் கொண்டும் குறையக் கூடாது என்று சம்பந்தப்பட்ட எல்லாரும் உறுதி பூண்டால் விலைவாசி ஏற்றத்தை வேகமாகக் கட்டுப்படுத்திவிடக்கூடும். பேச்சுவார்த்தைகள்மூலமே தங்களுடைய பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்ளப் புதிய உற்சாகம் பிறக்கும்.

ஜனாதிபதி தொழில் துறையில் வேலை நிறுத்தத்துக்கு ஓய்வு தர வேண்டியதன் அவசியத்தை மட்டுமே சொன்னார். இதர பல துறைகளில் கூட ஓய்வு கொடுக்க வேண்டிய அம்சங்கள் உள்ளன, உதாரணமாக:

இஷ்டப்படி நோட்டு அச்சடித்து விநியோகம் செய்து பணப் புழக்கத்தை விரிவுபடுத்தும் பழக்கத்துக்குக் கட்டாயமாக மூன்று ஆண்டு கால ஓய்வு கொடுக்க வேண்டும்.

உற்பத்திக்கு நேரடியாக உதவாத டம்பாச்சாரிச் செலவுகள் செய்யும் பழக்கத்துக்கு மத்திய அரசும் மாநில அரசுகளும் விடுமுறையளிக்க வேண்டும்.

மிக அத்தியாவசியமாயிருந்தாலொழிய, வாய்த்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று அமைச்சர்களும், சட்டசபை அங்கத்தினர்களும், சர்க்கார் செலவில் லோக சஞ்சாரம் செய்வதற்கு ஓய்வு கொடுக்க வேண்டும்.

ஒவ்வோர் ஆண்டிலும் பட்ஜெட் சமயத்தில் புதுப் புது உற்பத்தி வரிகளையும், சுங்க வரிகளையும், இதர வரிகளையும் விதிக்கும் கொடுமையான பழக்கத்துக்கு மூன்றாண்டு காலத்துக்காவது ஓய்வு கொடுக்க வேண்டும். விலைவாசிகளின் உயர்வுக்கு மறைமுக வரிகள் ஒரு முக்கியமான காரணமாகும்.

சர்க்கார் துறையில் தொழில்களைக் கண்மூடித்தனமாக விஸ்தரித்துக் கொண்டே போவதற்கு ஓய்வு கொடுக்க வேண்டும். சர்க்கார் துறைத் தொழில்கள் நஷ்டத்திலேயே நடந்து கொண்டிருக்கும் போக்குக்கு ஓய்வு தர வேண்டும்.

எடுத்ததற்கெல்லாம் பெர்மிட், லைசென்சுகள் என்று மக்களை அதிகாரத் துஷ்பிரயோகங்களுக்கு உட்படுத்தும் நிலைமைக்கு ஓய்வு கொடுக்க வேண்டும்.

நாட்டின் பொருளாதாரம் மிக நெருக்கடியான நிலைமையில் இருக்கிறது என்பதை ராஷ்டிரபதியும் மறுக்கவில்லை, பிரதமரும் மறைக்கவில்லை. இந்த நிலைமையில் உற்பத்தி பெருகினால் மட்டுமே விலைவாசிகளைக் குறைக்க முடியும். குறைந்த அளவு பொருள்களை மிகுந்த அளவு பணம் துரத்திக் கொண்டு செல்லும் நிலையை மாற்றி, மிகுந்த அளவுப் பொருள்கள் மிதமான அளவு பணத்தைத் துரத்தும்படி செய்தால்தான் பற்றுக்குறைப் பொருளாதாரம் சுபிட்சப் பொருளாதாரமாக மாறும்.

# தமிழ் நாட்டிலே... தீரன்

## திருத்தணியில் நடந்த தீமை

திருத்தணி கோவிலின் தங்கும் விடுதிகளில் ஒன்றில் நடந்ததாக முதலில் திரு பக்தவத்சலம் அவர்கள் எழுதிப் பின்பு தமிழக சட்ட சபையிலும் எழுப்பப்பட்ட ஒரு பிரச்னையை அறியும்போது எப்படிப்பட்டவர்களாலும் கோபமோ, மனக் கொதிப்போ அடைவதைத் தவிர்க்க முடியாது. இரண்டு மாதங்களுக்கு முன் கோவில் விடுதியில் வந்து தங்கியிருந்த கணவனும் மனைவியுமாகிய யாத்திரிகர்களில் கணவன் ஏதோ காரியமாக வெளியே சென்றிருந்தபோது மனைவியை— அவள் தனியே இருக்கும் வேளையில் புகுந்து பலாத்காரம் செய்ய முயன்றிருக்கிறார் கோயில் அறங்காவலர்களில் ஒருவர். இந்த அக்கிரமம் நடந்ததுபற்றிக் திரு பக்தவத்சலம் தினசரி ஒன்றில் எழுதியிருப்பதைக் குறிப்பிட்டுச் சட்ட மன்றத்தில் உறுப்பினர் ஒருவர் கேள்வி எழுப்பியபோது, "தவறு செய்த அறங்காவலர் சஸ்பெண்டு செய்யப்பட்டிருக்கிறார். விசாரணை நடைபெறுகிறது" என்று சம்பந்தப்பட்ட அமைச்சர் மறுமொழி கூறியிருக்கிறார். கேள்வி கேட்ட உறுப்பினரோ அந்த மறுமொழியில் மட்டும் திருப்தி அடையாமல், "இந்தத் தண்டனை போதாது. தெருவில் நிறுத்தி வைத்துச் சவுக்கால் அடிக்க வேண்டும்" என்று ஆவேசமாகச் சொல்லியிருக்கிறார். உறுப்பினரின் கோபம் நியாயமானதுதான்.

## உலகம் சிரிக்கிறது

சாதாரணமாகக் குறிப்பிட்டுச் சொல்லும்போது சந்தி சிரிக்கிறது, ஊர் சிரிக்கிறது என்றெல்லாம்தான் சொல்லுவது வழக்கம். ஆனால் இங்கே நாம் சொல்லப் போவதோ தமிழகத்தில் மருத்துவக் கல்லூரி அட்மிஷன் விஷயமாகத் தெரிவிக்கப்பட்டு உலகம் சிரித்த ஒரு விஷயமாகும்.

சமீபத்தில் சிங்கப்பூர் சென்றிருந்த தி.மு.க பிரமுகர் ஒருவர் அங்குள்ள ஒரு குடும்பத்தினரிடம் அந்தக் குடும்பத்து இளைஞர் ஒருவருக்குத் தமிழ்நாட்டில் உள்ள மருத்துவக் கல்லூரி ஒன்றில் இடம் பெற்றுத் தருவதாக உறுதி கூறி ரூபாய் பத்தாயிரம் முன்பணம் வாங்கிக் கொண்ட விவரத்தை பம்பாயிலிருந்து வெளியாகும் 'கரண்ட்' பத்திரிகையில் அறிவித்திருக்கிறார் அந்தக் குடும்பத்தின் தலைவி. கடைசியில் தமிழ் நாட்டில் எந்த மருத்துவக் கல்லூரியிலும் இடம் கிடைக்கவும் இல்லையாம். இடம் வாங்கித் தருவதாகப் பிரமுகர் பெற்றுக் கொண்ட ரூபாய் பத்தாயிரமும் திரும்பக் கிடைக்கவில்லையாம். வேறு எங்கும் இடம் கிடைக்காமல் போய், அலைந்து சிரமப்பட்டு, 'மணிபால்' மருத்துவக் கல்லூரியில் இடத்துக்கு முயன்று வருவதாக அந்தக் குடும்பத் தலைவி 'கரண்ட்' பத்திரிகை மூலம் அறிவித்திருக்கிறார். இதைப் படித்து ஊர் மட்டும் சிரிக்காது. உலகமே சிரிக்கும். வெளிநாட்டிலும் லஞ்சம் வாங்குகிற அளவு இங்குள்ளவர்களின் கை அவ்வளவு நீளமாக இருப்பதைக் கண்டு உலகம் சிரிக்கும்; தலைமையை நொந்து தமிழன் தலை குனிவான்.

## சுதந்திர தினச் செய்தி

இந்த ஆண்டு சுதந்திர தினத்துக்கு முந்திய மாலையில் கிடைத்த மிகப் பெரிய செய்தி என்பது பிரதம மந்திரி இந்திரா காந்தியும், திரு காமராஜும் சந்தித்துப் பேசியிருப்பது ஆகும். 95 நிமிஷ உரையாடலாகிய இந்தப்



## பட்டேலின் மறைவு

ஸ்ரீ தாஹியா பாய் பட்டேல் திடீர் என்று நோயுற்று, மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு மரணமடைந்தார் என்ற செய்தியைக் கேட்டு அவரை அறிந்தவர்கள் அனைவரும் பெரும் துயரமடைந்துள்ளனர். திரு தாஹியா பாய் பட்டேல் சர்தார் வல்லபாய் பட்டேலின் அருமைப் புதல்வர். ராஜாஜி சுதந்திரக் கட்சி தொடங்குவதாய் அறிவித்தபோது, முதன் முதலில் உற்சாகமாகச் சேர்ந்து அரும் பணியாற்றியிருக்கிறார். ராஜ்ய சபையில் பலகாலம் சுதந்திரக் கட்சியின் அங்கத்தினராக இருந்து, ஆளும் கட்சியின் ஊழல்கள் பலவற்றை வன்மையாக அம்பலப்படுத்தி, ஆளும் கட்சிக்குக் கிலியாக இருந்திருக்கிறார். பாரதப் பண்பிலும், காந்திய நெறியிலும், ராஜாஜியின் கொள்கைகளிலும் தீவிரப் பற்றுக் கொண்டிருந்தவர். அவரது மறைவு, நாட்டுக்கும் ஜனநாயகத்தின் அத்யாவசியத் தேவையான எதிர்ப்பு அணிக்கும் மகத்தான நஷ்டம்.







"உன் பிள்ளையும், என் பிள்ளையும், நம் பிள்ளையுடன் சேர்ந்து விளையாடுவதைப் பார்!..." — பழைய ஹாஸ்யம்

பேச்சு நாட்டின் பொதுப் பிரச்னைகளைப் பற்றியது என்றாலும் சிறப்பான அடையாளமாகக் கருதப் படுகிறது. தேசிய சக்திகளுக்கும், நாட்டு நலனில் அக்கறை உள்ளோருக்கும் இந்தச் சந்திப்பு மிகுந்த மகிழ்ச்சியைத் தரும் என்பது உறுதி. பிரிவினைவாதிகளும் தேச விரோத சக்திகளும் வேண்டுமானால் இந்தச் சந்திப்பைப் பற்றிக் கவலைப்படலாம். ஆனால் நாடு இன்றுள்ள நிலையில் பொறுப்புள்ள பெரிய தலைவர்கள் சந்தித்து நாட்டு நலன் பற்றி விவாதிப்பது நல்லதுதான்.

## கறுப்புப் பணமும் மாநில அரசும்

இருக்கிற அதிகாரங்களையும் உரிமைகளையும் வைத்துக் கொண்டு மக்கள் நலனுக்கான நல்ல காரியம் எதையும் சாதிக்க முடியாத தி. மு. க. அரசு புதிது புதிதாக இந்த அதிகாரம் எங்களுக்கு வேண்டும், அந்த அதிகாரம் எங்களுக்கு வேண்டும் என்று எதையாவது கேட்டுக் கொண்டே யிருக்கிறது. இப்போது புதிதாகக் 'கறுப்புப் பணத்தை வெளிக் கொண்டு வரும் அதிகாரம்' என்று கேட்கப் பட்டிருக்கிறது. சட்டமன்றத்தில் தீர்மானமும் நிறைவேற்றப் பட்டிருக்கிறது. கட்சியின் நலனை மட்டுமே கருத்தில் கொண்டு விருப்பு வெறுப்புக்களை வளர்க்கும் தி.மு.க. போன்றதோர் ஆளும் கட்சி இந்த அதிகாரத்தை எப்படி எப்படித் துஷ்பிரயோகம் செய்யும் என்பதில் மக்களுக்குச் சந்தேகம் இருப்பது நியாயமே. கடந்த சில ஆண்டுகளில் தி.மு.க. முக்கியஸ்தர் எனக் கருதப்படும் சிலருடைய வீடுகளில் கூட மத்திய அதிகாரிகள் தயங்காமல் புகுந்து கறுப்புப் பண வேட்டையாடியிருக்கின்றனர். இந்த அதிகாரமே மாநில அரசிடம் இருந்தால் இப்படி நடந்திருக்குமா என்பது சந்தேகமே. கட்சியை விட்டு விலகி எதிர்க் கட்சியில் சேருகிறவனுக்குத் தொல்லை கொடுக்குமாறு போலீஸைத் தூண்டவும், விலகியவனே மறுபடியும் தங்கள் கட்சியில் சேர்ந்து விட்டதாக அறிவித்ததும் 'அவனுக்குத் தொல்லை கொடுக்க வேண்டாம்' என்று போலீசுக்கே கடிதம் மூலம் தெரிவிக்கவும் செய்கிற தி. மு. க. பிரமுகர் இருப்பது தெரிய வந்திருக்கும் சமயத்தில் கறுப்புப் பணத்தை வெளிக் கொணரும் அதிகாரம் தி. மு. க. ஆட்சியில் எப்படிப் பயன்படுத்தப்படும் என்பதைப் பற்றிச் சந்தேகிக்கத்தான் வேண்டியிருக்கிறது. 'இந்த வேண்டுகோள், தேளுக்கு மணியம் கொடுப்பது போன்றது' என்று வர்ணித்திருக்கிறார் தமிழ் நாட்டின் முன்னாள் முதலமைச்சர் திரு எம். பக்தவத்சலம்.

## சேலமும் மேலும் ஓர் அசிங்கமும்

தேச பக்தியிலும் சுதந்திரப் போரிலும் பெரும் ஈடுபாடுள்ள சேலம் நகரில் சமீபத்தில் சில ஆண்டுகளாக நடைபெறும் சம்பவங்களைப் பார்த்தால் அந்த நகரின் நற்பெயரே கெட்டு விடும்போல் இருக்கிறது. 1971ல் நடைபெற்ற தேர்தலுக்கு முன் இந்துக் கடவுள்களை அவமதிக்கும் கடவுள் நிந்தனை ஊர்வலம்




சுதந்திர தின அறைகூவல்!

## ராஜாஜி சிந்தனை

வண்டியில் பூட்டப்பட்ட மாடுகள் எப்படி நடந்துகொள்கின்றன என்று எப்போதாவது நீங்கள் கவனித்தது உண்டா? கையில் கம்புடனே சாட்டையுடனே உட்கார்ந்து கொண்டிருக்கும் வண்டியோட்டியை ஒரு கண் கவனித்துக் கொண்டிருக்கும். அதே நேரத்தில் பாதையையும் கவனமாகப் பார்த்துக் கொண்டு போகும். காளையின் கண்கள் அஷ்டாவதானம் செய்கின்றன. சாட்டை சற்று அசைந்தாலும் அது கவனித்துவிடுகிறது. பாதையையும் பார்த்துக் கொண்டு மேலே நடக்கிறது. நம்முடைய ஜனநாயக சர்க்கார்கள் காளையைப் போல் அஷ்டாவதானம் செய்து கவனத்துடன் நடந்து கொள்ள வேண்டும். பத்திரிகைகளும் பொதுஜன அபிப்பிராயமும்தான் வண்டியை ஓட்டுபவர்கள். இருவருடைய கையிலும் பலமான சாட்டை இருக்கிறது.

சேலத்தில்தான் நடந்தது. இப்போது சேலம் நகரின் முக்கிய பகுதிகளில் இருந்த மகாத்மா காந்தியின் சிலைகள் இரண்டை யாரோ தேச விரோதிகள் அசிங்கப்படுத்திச் சிதைக்க முயன்றிருக்கிறார்கள். அதுவும் சுதந்திர தினத்தன்று நடந்திருக்கிறது. சேலம் நகருக்கு மேலும் கெட்ட பெயரை உண்டாக்குகிறது இந்தச் சம்பவம். இதைக் கண்டு மனம் பதைத்த உள்ளூர் தேசபக்தர்கள் ஊர்வலமாக வந்து உண்ணாவிரதம் இருந்திருக்கிறார்கள். துரோகிகள் அசுத்தப்படுத்திய காந்தி சிலைகளுக்குப் பால், பன்னீர், அபிஷேகம் செய்து பிராயச்சித்தம் தேடியுள்ளனர். நகரின் நற்பெயர் நீடிக்க இனியாவது இப்படி நடக்காமல் சேலம் வாசிகள் பார்த்துக்கொள்ளவேண்டும். தேசப் பிதாவின் சிலையை அசுத்தப் படுத்திய விஷமிகளைக் கண்டுபிடித்துப் போலீஸார் கடுமையாகத் தண்டிக்கவேண்டுகிறோம்.

### "இந்தியாவிலுள்ள தமிழ்நாடு"

விழுப்புரம் தி. மு. க. மகாநாட்டில் தமிழக முதல்வர் எழுப்பிய குழப்பமான கோஷங்களை மக்களுக்குப் புரிய வேண்டுமே என்ற நோக்கத்தினாலோ அல்லது தமக்கே புரிய வேண்டுமே என்ற நல்லெண்ணத்தினாலோ இப்போது மாற்றிக்கொண்டிருக்கிறார் என்று தெரிகிறது.

'இந்தியா இந்தியருக்கே — தமிழ் நாடு தமிழருக்கே' என்ற பழைய கோஷத்தைக் கொஞ்சம் மாற்றி, 'இந்தியா இந்தியருக்கே— இந்தியாவிலுள்ள தமிழ் நாடு தமிழருக்கே'— என்று புதிதாகச் சொல்லியிருக்கிறார். தம்முடைய 'விழுப்புரம் கோஷம்' பற்றி மத்திய அரசாங்கம் ஏதாவது விளக்கம் கேட்குமானாலும் இந்தப் புதிய கோஷத்தையே விளக்கமாக எழுதப் போவதாகவும் அவர் தெரிவித்திருக்கிறார்.

இதே பாணியில் மகாராஷ்டிரத்தில் சிவசேனைக்காரர்கள், 'இந்தியாவில் உள்ள மகாராஷ்டிரம் மகாராஷ்டிரருக்கே' — என்றும், மைசூரில் உள்ள வாட்டல் நாகராஜ் வகையறாக்கள், 'இந்தியாவிலுள்ள கர்நாடகம் கர்நாடக மக்களுக்கே' என்றும் மாநிலவாரியாகக் கோஷம் போட ஆரம்பித்துவிட்டால் அப்புறம் 'இந்தியா என்பது எது?' என்று கேட்க வேண்டியதுதான். இதைத்தான் முதல்வர் விரும்புகிறாரா என்ன?

### மாறுவேடம்

தமிழ்நாடு சட்டசபையில் உறுப்பினர் ஒருவர் அமைச்சர்களுக்குப் பொன்னான யோசனை ஒன்றைத் தெரிவித்திருக்கிறார். "நிர்வாகத்தில் உள்ள ஊழல்களைத் தவிர்ப்பதற்கு அமைச்சர்கள் தங்கள் சுற்றுப் பிரயாணங்களின்போது அவ்வப்போது மாறு வேடங்களில் சென்று சோதனையிட வேண்டும்" என்பதுதான் அந்த யோசனை.

இப்போதெல்லாம் சொந்தக் கோலத்தில் போனாலே மக்கள் அமைச்சர்களை மதிப்பதில்லை, கூட்டம் கூடுவதில்லை, மரியாதை செய்வதில்லை என்ற குறை இருக்கிறது. மாறுவேடத்தில் போய் ஊழலைக் கண்டுபிடிக்க ஓர் அமைச்சர் முயலுகையில் அவர்தான் அமைச்சர் என்று தெரியாத காரணத்தால் அவருடைய ஊழல்களையே மக்கள் அவரிடம் விவரிக்கத் தொடங்கினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

### ஆஸ்பத்திரிகளின் அவல நிலை

தமிழ் நாட்டில் உள்ள அரசாங்க ஆஸ்பத்திரிகளின் நிலைமையைப் பரிசீலனை செய்து மதிப்பிட்டு ஓர் அறிக்கை மூலம் விவரங்களைத் தருமாறு சட்ட மன்ற உறுப்பினர் இரு பழநிவேல்ராஜன் தலைமையில் ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டிருந்தது. அந்தக் குழுவைச் சேர்ந்தவர்கள் தமிழகம் முழுவதும் சுற்றிப் பார்த்துத் தெரிவித்துள்ள கருத்துக்களில் அரசாங்க மருத்துவ மனைகளின் அவலநிலை தெள்ளத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

பொதுவாகப் பல ஆஸ்பத்திரிகளின் பராமரிப்பு மிகவும் அதிருப்திப்படத்தக்க நிலையிலேயே உள்ளதென்பதை மேற்படி குழு எடுத்துக் காட்டியுள்ளது.

ஆரோக்கியத்தைத் தரும் இடங்களே ஆரோக்கியக் குறைவாக இருக்குமானால் அப்புறம் மக்கள் எங்கே போய் ஆரோக்கியத்தைத் தேட முடியும்?




# மின்சக்தித் துறையிலே மிக உயர்ந்த பெயர்





எளிய முறையிலே துவங்கி, எழுச்சியும் செயல் வேகமும் துடித்திடும் மாபெரும் நிறுவனமாக வளர்ந்துள்ளது HE. இன்று, மின் சக்தியின் உற்பத்தி, இடம் விட்டு இடம் செலுத்தல், பயன்படுத்தல் ஆகியவற்றுக்கான கனரக மின் கருவிகளின் துறையிலே மதிப்பிற்குரிய பெயராகத் திகழுகிறது HE.





HE நிறுவனத்திலே, கைதேர்ந்த பொறியியல், தொழில்நுட்ப வல்லுனர்களின் குழாம்கள், தன்னிறைவுள்ள, தனிநோக்க ஆராய்ச்சி—உற்பத்தி யூனிட்டுகள் மூலம் இயங்கிவருகின்றன. உலகின் எப் பகுதிக்கும் வேண்டியிருக்கும் எவ்வகையான, எந்த அளவுள்ள கனரக மின்கருவிகளின் விசேஷத் தேவைகள் அனைத்துக்கும் ஈடுகொடுக்கும் செயல்திறன் படைத்துள்ளவை இந்த யூனிட்டுகள்.





இதோ எங்கள் கருவிகளின் வரிசை :

- வாட்டர் டர்பைன்கள், அவற்றுக்கேற்ப 200 மெவா. வரை ஜெனரேட்டர்கள்.
- நீராவி டர்பைன்கள், டர்போ-ஜெனரேட்டர்கள், மற்றும் கண்டென்ஸர்கள்.
- 400 MVA வரை யூனிட் ரேட்டிங்குகளும், 400 கிவா வரை வோல்டேஜும் உடைய டிரான்ஸ்பார்மர்கள்.
- உயர் வோல்டேஜ் ஸ்விட்ச்கியர்—220 கிவா. வரை.
- திட்ட நோக்கிலுள்ள மிகப் பெரிய சைஸ்கள் வரைக்கும் AC மற்றும் DC மோட்டார்கள்.
- கண்ட்ரோல்கியர் மற்றும் கண்ட்ரோல் பேனல்கள்
- எலக்ட்ரிக் மற்றும் டீசல் எலக்ட்ரிக் டிராக்ஷன் எக்யிப்மெண்ட்.
- ரெக்டிஃபையர்கள் மற்றும் கெபாசிட்டர்கள்.
- வோல்டேஜ் டிரான்ஸ்பார்மர்கள் (மின் காந்த மற்றும் கெபாஸிட்டர் ரகங்கள்) மற்றும் கரெண்ட் டிரான்ஸ்பார்மர்கள்—400 கிவா. வரை உள்ள வோல்டேஜ்களுக்காக.







## ஹெவி எலக்ட்ரிகல்ஸ் (இந்தியா) லிட்., போபால்

(இந்திய அரசாங்க நிறுவனம்)

JAISONS-22D-R-TAM

# முக்திக்கு முந்தைய நிலையில் பக்தி



ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய சுவாமிகள்

ஒரு தகப்பனார் இருக்கிறார். தம் பெண்ணுக்கு நல்ல வரனைப் பார்த்துக் கல்யாணம் செய்து வைக்க வேண்டும் என்று அலைகிறார். வரன் கிடைக்கிறான். கல்யாணம் நிச்சயமாகிறது. கல்யாணமானவுடன் பெண்ணை மாப்பிள்ளை அழைத்துக் கொண்டு போய்விடப் போகிறான். கன்னிகாதானம் செய்கிற தகப்பனாரின் மனசு எப்படி இருக்கும்? பெண்ணுக்கு நல்ல வரன் கிடைத்ததே என்ற சந்தோஷம் ஒரு மூலையில் இருக்கத்தான் செய்யும். ஆனால் அதை அமுக்கிவிடுகிற மாதிரி, இத்தனை காலம் வளர்த்த பெண் நம்மை விட்டுப் போகிறாளே என்ற துக்கம்தான் அதிகமாக இருக்கும். இவரேதான் வரன் பார்த்தார், தேடித் தேடிப் பார்த்தார்; தம் சம்பாத்தியத்தையெல்லாம் மனசாரச் செலவிட்டுக் கல்யாணமும் செய்கிறார். ஆனாலும் கன்னிகாதான சமயத்தில் அவருடைய மனசை முறுக்கிப் பிழிகிறமாதிரி இருக்கிறது; கண்ணில் ஜலம்கூட வந்துவிடும்போல் இருக்கிறது.

முக்தி நிலையை அடைய அருகதை பெற்ற சாதகனை முமுக்ஷு என்பார்கள். இடையறாத பக்தி செலுத்திச் செலுத்தி ஒருவன் இந்த அருகதையைப் பெற்று விடுகிறான். அவனுக்கு முக்தி கிடைக்கிற சமயம் கைக்கு எட்டினாற் போல் வந்துவிடுகிறது. அப்போது அவன் ஒரு தர்மசங்கடமான நிலையில் இருக்கிறான். கன்னிகாதானம் செய்து தருகிற தகப்பனாரின் மன நிலை மாதிரிதான் இவனுக்கும் இருக்கிறது. வரன் தேடி அலைந்த மாதிரி இவனே முக்திக்காகப் பெரிய பிரயாசை செய்து பக்தி மார்க்கத்தில் எல்லா அநுஷ்டானமும் செய்தான். அதனால் மனசு பூரணமாகச் சுத்தமாகி பரமாத்மாவில் கரைகிற நிலை வந்துவிட்டது. கரைந்தபின் பகவானும் இல்லை, பக்தியும் இல்லை. மணப் பெண்ணை வரனுக்குக் கொடுக்கிற தகப்பனுக்கு அழுகை வருகிற மாதிரி, மனப் பெண்ணைப் பரமாத்மாவுக்குத் தத்தம் செய்கிற முமுக்ஷுவுக்கும் பெரிய துக்கம் உண்டாகிறது.

இந்தத் துக்கத்தை சுலோகத்தில் வெளியிடுகிறார் ஒரு கவி. ('பஸ்மோத்தூளன பத்ரமஸ்து பவதே' என்று ஆரம்பமாகும் சுலோகம் அது.)

''பரமேச்வரன் என் பக்தியில் மகிழ்ந்து என்னை மோக்ஷத்தில் சேர்க்க இருக்கிறான். இனி மேல் நான் விபூதி பூசிக் கொண்டும், ருத்ராட்சம் போட்டுக் கொண்டும் பூஜை ஜபம் முதலிய படிகளில் ஏறிப் போக வேண்டியதில்லை. ஏ, விபூதியே போய் வா! உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும்; சுபமான ருத்ராட்ச மாலையே, உனக்கும் பிரியாவிடை தருகிறேன்! ஹா, பக்தி மார்க்கப் படிக்கட்டுகளே, உங்களையும் விட்டுப் பிரிகிறேன். எனக்கு ஓர் ஆனந்தப் பிரபஞ்சத்தையே தந்த உங்களை எல்லாம் சிதைத்துப் போடுகிற மோட்சம் என்கிற மகா மோகத்தில் தோய்ந்து போகிறேன்'' என்கிறார்!

மோகத்தைப் போக்குவதுதான் மோட்சம். ஆனால் பக்தி இன்பத்தையும், அதற்கான சாமக்கிரிகளையும் கைவிட்டு விட்டு மோட்சம் பெற வேண்டும் என்கிற போது மோட்சமே மோகமாகத் தோன்றுகிறது!

இதேபோல் கிருஷ்ணகர்ணாமிருதத்திலும் ஒரு சுலோகம் இருக்கிறது. பக்தி முற்ற முற்றக் கருமம் நசிக்கிறதைப் பற்றியது இந்த சுலோகம். ('ஸந்த்யாவந்தன பத்ரமஸ்து பவதே' என்று ஆரம்பிக்கும் அது.) கிருஷ்ண பக்தி அதிகமாக ஆக லீலாசுகரால் ஸந்தியா வந்தனம், பித்ரு தர்ப்பணம் ஆகிய கர்மாநுஷ்டானங்களைக்கூடச் செய்ய முடியவில்லை. அவற்றிடமிருந்து பிரியாவிடை பெறுகிறார்.

முதல் நிலையில் அவரவருக்கான கர்மத்தை சாஸ்திரப்பிரகாரம் 'இது வேண்டுமா, வேண்டாமா?' என்று எதிர்க் கேள்வி கேட்காமல் அநுஷ்டிக்க வேண்டும். இதனால் மனத்தில் விருப்பு வெறுப்பு குறைகிறது. சித்தசுத்தி ஏற்படுகிறது. அழுக்கு நீங்க நீங்க மனசு ஈசுவரனிடம் அதிகமாக ஈடுபட்டு ஒருமுகமாகத் தொடங்குகிறது. இந்த பக்தி இரண்டாம் நிலை. பக்தி முற்றும்போது ஞானம் சித்திக்கிறது. இது இறுதி நிலை.

கர்மத்தையோ, பக்தியையோ நாமாக விடவேண்டியதில்லை. பழுத்த பழம் தானாகக் காம்பிலிருந்து விடுபடுகிற மாதிரி கர்மம், பக்தி எல்லாம் பூரணமடைந்தவுடன் தாமாகவே நழுவிப் போகும். பக்தியைவிட்டு நேராக முக்திக்கு நாம் முயல வேண்டும் என்பதில்லை. பக்தி பண்ணிக் கொண்டிருந்தாலே போதும்; தானே அதுவாக முக்திக்கு அழைத்துப் போகும். எனவே முக்தி வேண்டும் என்று பிரார்த்திக்காமல் பக்தி வேண்டும் என்று வேண்டிக் கொண்டேயிருந்தால் போதும்! கோபாலகிருஷ்ண பாரதியார் சொன்னபடி 'பக்தி பண்ணிக் கொண்டிருந்தால் முக்தி பெறலாமே.'

(அடுத்த இதழில் : பகவத்பாதர் தரும் பக்தி லட்சணம்.)

# ஒரு தொப்பியின் நிமித்தம்..!

"என்ன, மறதியைப் பற்றியா பேசிக் கொண்டிருக்கிறீர்கள்? எங்கள் ஊரில்—அதாவது காஸ்ரிலேவ்கா — நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டிய ஆசாமி ஒருவன் இருக்கிறான் — நான் சொல்வது கேட்கிறதா?— அவன் பெயர் ஷோலெம் ஷாச்னு. ஆனால் அவனை நாங்கள் மரமண்டை ஷாச்னு என்று தான் அழைப்போம். மறதியாவது மறதி! சதா ஒன்றிலிருந்து ஒன்றுக்குத் தாவிக் கொண்டே யிருக்கும் மனசு. கடவுளே! அவனைப் பற்றிக் கூறப்படும் கதைகள்...! பெட்டி பெட்டியாக அடைத்து அடுக்கலாம்!"

காஸ்ரிலேவ்கா என்ற ஊரைச் சேர்ந்த வியாபாரி ஒருவரின் வார்த்தைகள் இவை. இதோ, அவரது வார்த்தைகளாலேயே தொடர்ந்து கதையை விவரிக்கிறேன். இந்தக் கதைக்கும் எனக்கும் சம்பந்தமே யில்லை.

இந்த ஷோலெம் ஷாச்னு இருக்கிறானே — அதாவது மர மண்டை ஷாச்னு — அவன் 'புரோக்கர்' வேலை பார்ப்பவன்; அதாவது, நிலம் ஒருவரிடமிருந்து ஒருவருக்குக் கை மாறும்போது கமிஷன் அடிப்பவன் என்று பெயர். — நான் சொல்வது கேட்கிறதா?— நிலப் பரிவர்த்தனை நடக்கிறதோ இல்லையோ, இவன் எப்போது பார்த்தாலும் ஏதாவது பேரம் பேசிக் கொண்டு நிலப் பிரபுக்களிடம் தொங்கிக் கொண்டே யிருப்பான். பேச்சுத் தான் பிரமாதமா யிருக்கும்; காரியம் ஒன்றும் நடக்காது.

ஒரு நாள் ஆண்டவன் ஷோலெம் ஷாச்னு விடம் கருணை கொண்டான். அதனால் புரோக்கராக வாழ்க்கையை ஆரம்பித்த நாள் தொடங்கி முதல் தடவையாக ஒரு பேரம் பேசி முடித்தான்.-கேட்டுக் கொண்டீர்களா?— ஆனால் மாமூலை வசூலிக்க வந்தது மரமண்டை ஷாச்னு அல்ல! மின்ஸ்க் ராஜதானியிலிருந்து வந்த ட்ராப்கின் என்ற யூதன். நீண்ட நாட்களாகவே புரோக்கர் வேலை பார்த்து வருபவன்!

ஒரு பெரிய ரகளை நடந்தது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? ஒரு யூதன் சிரமப் பட்டுத் தந்திரமாகத் தனக்கு ஒரு கமிஷன் கிடைக்க ஏற்பாடு செய்துகொள்ள வேண்டியது. அப்போது வேறு எங்கிருந்தோ வந்த இன்னொரு யூதன் இவனுக்கு ஒன்றுமில்லை என்றாக்குவதா? நீதியே கிடையாதா? ஷோலெம் ஷாச்னு பார்த்துக் கொண்டு சும்மா இருப்பதா? — என்ன நான் சொல்வது கேட்கிறதா? — அவன் ஓரேயடியாகக் கத்திக் கூப்பாடு போட்டு அலற அடித்தான். கடைசியில் அவன் வாயை மூடுவதற்காக எதையோ கொடுத்துச் சரிக்கட்டினார்கள்.

பிச்சைக் காசு கிடைத்ததும் ஷோலெம் ஷாச்னு அதன் பெரும் பகுதியை வீட்டுக்கு அனுப்பி வைத்தான். அவன் மனைவி கடன்களை அடைக்கவும் குழந்தைகளுக்குப் புதிய உடை வாங்கித் தந்து* பாஸோவர் பண்டிகைக்குத் தயாராகவும் அது உதவும். மேலும் அவனுக்கே சில பொருள்கள் வாங்க வேண்டியிருந்தது. சம்பிரதாயப்படி குடும்பத்தினருக்குப் பண்டிகைக்காகப் பரிசுப் பொருள்களும் வாங்க வேண்டும்.

இதற்கிடையில் காலம் பறந்தது. பாஸோவர் பண்டிகையும் நெருங்கி விட்டது. ஆகவே ஷோலெம் ஷாச்னு — இதை நன்றாகக் கவனிக்க வேண்டும் — தந்தி ஆபீஸுக்கு ஓடி வீட்டுக்குத் தந்தி கொடுத்தான்: "பாஸோவருக்கு வீட்டுக்கு வருகிறேன்; நிச்சயமாக!"

வருகிறேன் என்றும், நிச்சயமாக என்றும் கூறுவது சுலபம். ஆனால் முயன்று பாருங்களேன்! அடாடா! எங்களுக்குச் சலுகை காட்டிப் புதிதாக ரயில் விடுகிறார்கள் அல்லவா? அதில் நாங்கள் பிரயாணம் செய்வதுபோல் பயணப்பட்டுப் பாருங்கள்! என்ன சுகம்! என்ன சுகம்! ஊர்தான் எவ்வளவு சீக்கிரம் வந்து விடுகிறது!

மிஸ்டர் ஷோலோம் ஆலிகெம்! பாஸோவர் பண்டிகையை முன்னிட்டு உங்கள் பேரக் குழந்தைகளைக் காண இது போன்ற ஒரு சொர்க்க சுகத்தை அனுபவித்துக் கொண்டு பயணப்படுவதென்றால் நீங்கள் உங்கள் பேரக் குழந்தைகளையே வேண்டாம் என்று மன மகிழ்ச்சியோடு துறந்து விடுவீர்கள்! எப்படிப் பட்ட பயணம்! கேளுங்கள்:

ஸோலோடைவ்கா ஸ்டேஷனை அடையும் வரை பின்னால் சாய்ந்தபடி ரயிலில் போய்க் கொண்டிருப்பீர்கள். ஸோலோடைவ்காவை அடைந்ததும்தான் தமாஷ் ஆரம்பமாகும். ஏனென்றால் அங்குதான் நீங்கள் ரயில் மாற வேண்டும். அங்கிருந்துதான் எங்கள் ஊரான காஸ்ரிலேவ்காவுக்குப் புதிய ரயில் பாதை போட்டிருக்கிறார்கள். அடாடா! என்ன கருணை! ஆனால் அவசரப் படக்கூடாது. ரயில்வே கால அட்டவணைப்படி நீங்கள் பல மணி நேரம் காத்திருப்பது அவசியம். என்றாலும் ஒரு நிபந்தனை — காஸ்ரிலேவ்கா ரயில்

---

* எகிப்தில் அடிமைகளாக இருந்த யூதர்கள் விடுதலை பெற்றதைக் கொண்டாடும் பண்டிகை. ஏழு நாட்கள் நீடிக்கும்.

ஷோலோம் ஆலிகெம்

# இட்டிஷ் கதை



யூதர்கள் ஒருவரை யொருவர் சந்திக்கும் போது "உனக்கு அமைதி உண்டாகட்டும்" என்று கூறும் முகமாக ஹீப்ரு மொழியில் "ஷோலோம் - ஆலிகெம்" என்று வாழ்த்து வார்கள். இந்த வார்த்தைகளையே தமது புனை பெயராகக் கொண்டவர் இந்த யூதக் கதாசிரியர். இயற்பெயர்: ஸாலமன் ராபினோவிட்ஸ். ருஷ்யா வில் கீவ் (Kiev) நகரில் பிறந்து 1916ல் கால மான இந்த யூதர், கிழக்கு ஐரோப்பிய நாடு களில் வாழும் யூதர்களைப் பற்றி அவர்களது பழகுமொழியாம் இட்டிஷ் பாஷையில் எழுதி னார். நாடற்ற மக்களாம் யூதர்கள் பரவலாய் ருஷ்யாவிலும், இதர கிழக்கு ஐரோப்பிய தேசங் களிலும் அடைக்கலம் புகுந்தபோது, இரண் டாந்தரப் பிரஜைகளாக அவர்கள் அடைந்த துயரங்களை நகைச்சுவை உணர்வோடு அங்கத பாணியில் கட்டிக் காட்டி இடித்துரைத்தார். ஆனால் அதே சமயம் தமது யூத இனத்தவ ரிடையே இருந்த குறைபாடுகளையும் உணர்ந்த வராய் நையாண்டி செய்யத் தயங்காதவராயும் விளங்கினார்.

ஆகவே இவர், எதனிடமோ வெறுப்பை வளர்க்கவோ அல்லது யாருக்காகவோ பரிந் துரைக்கவோ எழுதாதவராகவும் கலையுணர்வு தந்த ஆனந்தத்துக்காகவே எழுதியவராகவும் கருதப்படுகிறார்.



புறப்பட்டுப் போன பிறகு நீங்கள் இந்த இடைவழி ஸ்டேஷனுக்கு வந்து சேரக் கூடாது! அதுவும் இரவு எத்தனை மணிக்கு இந்த அரிய வரவேற்பு என்கிறீர்கள்? சரியாக நள்ளிரவில்! நன்றி சொல்லத் தானே வேண்டும்! களைத்துப் போய் வெறுப்பு மிகுந்த சமயமாகப் பார்த்து இந்த நடு வழி ஸ்டேஷனில் கொண்டு விடுகிறார்கள் அல்லவா? தூக்கத்தைத் தவிர வேறு ஒரு நண்பனும் இல்லாத இந் நேரத்தில் இந்த ஸ்டேஷனில் தலை யைச் சாய்க்க ஓரிடம் கிடையாது.



கதையை வளர்த்துவானேன்? நமது ஷோலெம் ஷாசுனு பையைச் சுமந்து கொண்டு லோவோடைவ்காவுக்கு வந்து சேர்ந்தபோதே அவனுக்குப் பாதிப் பிராணன் போய்விட்டிருந்தது. ஏற் கனவே இரு இரவுகளைத் தூக்கமின்றிக் கழித்து விட்டிருந்தான் அவன். ஆனால் அதெல்லாம் ஒன்றும் பிரமாதமில்லை







என்ற நிலையில் இருந்தான் இப்போது. இரவு முழுவதும் அவன் ஸ்டேஷனில் காத்திருக்க வேண்டும். அவன் என்ன பண்ணுவான்? உட்கார ஓர் இடம் இருக்குமா என்று சுற்று முற்றும் பார்த்தான். உட்கார இடமா? அப்படி ஒன்று இருப்பதாக அங்கு யாரும் கேள்விப்பட்டது கூட இல்லையே! ஊஹூம்! ஓரிடம் கிடையாது! ஸ்டேஷன் சுவர்களில் கரி அப்பிக் கிடந்தது. தரை உமிழப்பட்ட எச்சிலால் மூடிக் கிடந்தது. இருள் சூழ்ந்து பயங்கரமா யிருந்தது. கடைசியில் அவன் ஒரு விசுப் பலகையில் பரிதாபகரமான ஒரு மூலையைக் கண்டு பிடித்தே விட்டான்! அங்கே அவன் நசுக்கப்பட்டாற் போல் முடங்கிக் கொள்ள மட்டும் கொஞ்சம் இடம் இருந்தது. அதற்கு மேல் இடமில்லாதபடி அந்த விசுப் பலகையை ஏகப்பட்ட பட்டன்களுடன் கூடிய சீருடை தரித்த ஓர் அதிகாரி ஆக்கிரமித்துக் கொண்டிருந்தான். கால் நீட்டிப் படுத்தபடி, பாண்டு முழக்கம் தோற்றுமாறு குறட்டை விட்டுக் கொண்டிருந்தான்!

இந்தப் பட்டன் ஆசாமி யார்? வருகிறானா, போகிறானா என்பதொன்றும் ஷோலெம் ஷாச்னாவுக்குத் தெரியாது. ஆனால் காசுக்கு எட்டாகக் கிடைக்கக் கூடிய சாதாரண அதிகாரி அல்ல அந்தப் பட்டன் ஆசாமி என்ற மட்டில் நன்றாகப் புரிந்தது. அதை அவனது தொப்பி தெளிவாய் உணர்த்தியது. ராணுவத் தொப்பி. முன்னால் முகத்துக்கு நிழல் தருமாறு சற்று நீண்டும் மையத்தில் சிவப்புப் பட்டை சுற்றப்பட்டும் இருந்தது. அவன் ராணுவ அதிகாரியா, போலீஸ் அதிகாரியா? யார் கண்டது? ஆனால் ஒன்று நிச்சயம். மணியோசைக்கிடையில் ரயில் வந்து நின்ற போது புலாவும் மதுவும் கழுத்து வரை உண்டுவிட்டிருந்த அவன் இறங்கித் தள்ளாடிய படி நடந்து இந்த விசுப் பலகையில் சரீரத்தைக் கிடத்தி யிருக்கிறான். அவன் அப்பனது திராட்சைக் கொடி வீட்டில் விச்ராந்தியாகப் படுத்திருப்பது போன்ற எண்ணத்தில் குறட்டை விளப்பிக் கொண்டிருக்கிறான்.

கனவானாக இருப்பதொன்றும் மோசமான வாழ்க்கை இல்லை; அதுவும் ஏராளமான பட்டன்களுடன் கூடிய உயர் அதிகாரியா யிருந்து விட்டால் ரொம்பச் சௌகரியம் என்று நினைத்தான் ஷோலெம் ஷாச்னா. பட்டன் அதிகாரி அருகில் அமரத் துணியலாமா அல்லது மரியாதையாக எட்ட நிற்பதுதான் நல்லதா? இவன் வெறும் இன்ஸ்பெக்டராக இருந்தால் பாதகமில்லை; உட்காரலாம். ஆனால் மாவட்ட இன்ஸ்பெக்டராக இருந்தால்? அல்லது மாநில அதிகாரியாகவே இருந்துவிட்டால்? அதைவிடவும் உயர் பதவி வகிப்பவனாயிருந்தால்? ஒரு வேளை இவன், யூதர்களை வெறுப்பவன் என்று ரொம்பப் பிரபலமடைந்துள்ள புருஷ்கெவிட்ச் என்பவனாகவே இருந்துவிட்டால்? இவனிடம் மாட்டிக் கொள்ள நேர்ந்தால்? ஷோலெம் ஷாச்னாவுக்கு இதை நினைத்த போதே மனம் சில்லிட்டுப் போய் விட்டது.

ஆனால் கூடவே அவன் தனக்குத் தானே சொல்லிக் கொண்டான்: கிடக்கான் பட்டன் ஆசாமி! புருஷ்கெவிட்ச்சுக்காக நான் ஏன் பயப்பட வேண்டும்? புருஷ்கெவிட்சைப் போல் நானும்தான் காசு கொடுத்துப் பயணம் செய்கிறேன். ஆக, அவன் வாழ்க்கை வசதிகள் எல்லாவற்றையும் பெறும்போது எனக்கு ஒன்றுமில்லாமல் போவானேன்? புருஷ்கெவிட்சுக்கு இரவில் ஆனந்தமாகத் தூக்கம் போட உரிமை உண்டென்றால் எனக்கும் சற்றுக் கண்ணயர உரிமை உண்டு தான்!"

ஷோலெம் ஷாச்னாவும் மனிதன்தானே? மேலும் ஏற்கனவே இரு இரவுகள் கண்ணிமைக்காமல் இருந்திருக்கிறான். ஆகவே அவன் அந்த நீண்ட ஆசனத்தின் ஒரு மூலையில் உட்கார்ந்து தலையைப் பின்னால் சாய்த்தான் — தூங்குவதற்காக அல்ல, லேசாகக் கண்ணயரத்தான். திடீரென்று அவனுக்கு ஞாபகம் வந்தது! பாஸோவர் பண்டிகைக்கு அவன் வீட்டில் இருக்க வேண்டும். நாளை, பாஸோவர் பண்டிகைக்கு முந்தைய தினம். அட கடவுளே! தூக்கத்தில் ஆழ்ந்து ரயிலைக் கோட்டை விட்டுவிட்டால்? ஆனால் இப்படியெல்லாம் ஏமாறாமல் இருக்கத்தானே அவன் யூதனாகப் பிறந்திருக்கிறான்?—என்ன நான் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்களா, இல்லையா? — ஆக, இதற்கான விடையையும் அவன் கண்டுபிடித்துவிட்டான். ஷோலெம் ஷாச்னா எழுந்து போய் ஒரு போர்ட்டரைக் கண்டுபிடித்துப் பேசினான். காசை வாங்கிப் பாக்கெட்டில் போட்டுக் கொண்ட போர்ட்டர், ரயில் கண்ணுக்குத் தென்பட்ட அந்தக் கணமே அவனைத் தட்டி எழுப்புவதாக உறுதியளித்தான். அவன் மன நிம்மதியுடன் ஆழ்ந்து உறங்கலாம். எனவே, ஷோலெம் ஷாச்னா அந்த விளிம்பில் அமர்ந்து, பையை யாரும் திருடிக் கொண்டு போய்விடக் கூடாது என்பதற்காக அதனைக் கட்டி அணைத்துக் கொண்டான். சிறிது சிறிதாகப் பின்னால் சாய்ந்து, சற்றுச் சௌகரியமான நிலைக்கு வந்ததும் கண்களைப் பாதி மூடினான். ஆனால் வெகு சீக்கிரமே அவன் ஒரு காலையும் அப்புறம் இன்னொரு காலையும் பெஞ்சின் மீது தூக்கி வைத்ததுடன் உடலையும் நீட்டித் தூக்கத்தில் ஆழ்ந்து போனான். தூக்கமா அது! ஆம்! ஆண்டவன் நமக்குக் கட்டளையிட்டபடி அவன் தூங்கித்தான் போனான். தலை பின்னால் சாய்ந்திருந்தது; தொப்பி தரையில் உருண்டு கிடந்தது; ஷோலெம் ஷாச்னாவின் குறட்டை எட்டு நாட்கள் ஆனாலும் அடங்காத அதிசயமாக அத்தனை பலமாக எழுந்தது! அவனும் மனித ஜன்மம்தானே?

“எழுந்திரு, எழுந்திரு!” என்றான் போர்ட்டர். “நேரமாகி விட்டது எழுந்திரு!”

ஆகா! லோலோடைஸ்கா ஸ்டேஷனில் இருக்கிறோம்! பாஸோவர் பண்டிகைக்கு வீட்டுக்குப் போக வேண்டும். அதற்கு டிக்கட் வாங்க ஓட வேண்டும்; ஓட்டமாக ஓட வேண்டும்! அது சரி..... என்ன ஆச்சு? தொப்பியைக் காணோம்! பை இருக்கிறது; தொப்பி எங்கே? பெஞ்சுக்கடியில் கையை விட்டுத் தொப்பி ஒன்று தட்டுப்படும் வரையில் துழாவினான் ஷோலெம் ஷாச்னா.

# FOUR AND A HALF MILLION PEOPLE READ THE WEEKLY...

*...NATURALLY!*

**It is Asia's finest illustrated magazine.**

**It gives you:**

* Current Topics. The Weekly helps you to keep pace with tomorrow: lively comment on topical subjects—political, social, economic, cultural.

* Communities. The Weekly helps you know your neighbours—their origins, customs, rituals, their problems and their achievements.

* General Features. The latest in books, films, music, theatre, painting, short-stories, humour and satire, a fun-filled page for children; jokes—new and stale; your Fortune from the Stars, and loads of other interesting material.

All written by experts, yet lively and readable.

All illustrated by the finest photographers, artists and cartoonists of the country.



**Make the Illustrated YOUR Weekly Habit**

**The Illustrated Weekly of India**

# ஒவ்வொருவரின் மேனிக்கும் பாதுகாப்பு தேவை




வியர்வை துர்நாற்றத்திலிருந்தும், அதனால் நுண்ணிய கிருமிகளிடமிருந்தும் உங்களுக்கும், மற்றவர்களுக்கும் ஏற்படும் சங்கடத்திலிருந்தும் பாதுகாப் பளிக்கிறது.
ஜி-11 கலந்து **சிந்தால் டாய்லெட் பவுடர்** இந்தப் பாதுகாப்பைத் தருகிறது. அதோடு...அன்றலர்ந்த மலரின் நறுமணத்தையும் தருகிறது.

**சிந்தால்** துர்நாற்றத்தை அறவே போக்கிப் பாதுகாப்பளிக்கும் டாய்லெட் பவுடர்.

Interpub/GSP-6/72R Tam

அகப்பட்டது அவன் தொப்பியல்ல; அந்த அதிகாரியின் தொப்பி. முகத்துக்கு நிழல் அளிக்க முன்புறம் நீண்ட தொப்பி. சிவப்புப் பட்டை சுற்றப்பட்டது. ஆனால் ஷோலெம் ஷாச்னுவுக்கு இந்த விவரங்களையெல்லாம் பார்த்துக் கொண்டிருக்க நேரமில்லை. டிக்கெட் வாங்கப் பறந்தான். டிக்கெட் வழங்கும் ஜன்னலருகே கூட்டம் நெருக்கியடித்தது. எல்லாரும் — அவனது யூதச் சகோதரர்கள் உட்பட — மொய்த்தார்கள். ஷோலெம் ஷாச்னு, டிக்கெட் வழங்கும் ஜன்னலைத் தன்னால் உரிய நேரத்துக்குள் நெருங்கவே முடியாதென நினைத்தான். உடனே அந்த எண்ணம் நாசமாய்ப் போகட்டும் என்றும் கருதியவனாய்ப் பையும் தொப்பியுமாக முண்டியடித்துக் கொண்டு முன்னேறினான். மக்கள், முன்னால் நீண்டிருப்பதும் சிவப்புப் பட்டை உள்ளதுமான அந்தத் தொப்பியைப் பார்த்ததும் அவனுக்கு வழிவிட்டு ஒதுங்கினார்கள். ''மேதகு அவர்களே! எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்டான் டிக்கெட் வழங்குபவன். 'திடீரென்று என்ன இந்த மேதகு?' என்று ஷோலெம் ஷாச்னு எண்ணினான். அது அவனுக்குத் துளியும் பிடிக்கவில்லை. 'கிண்டலா பண்ணுகிறார்கள்? ஒரு யூதனை இலேசாக இளக்காரம் செய்வது இப்படித்தானா?' இருந்தபோதிலும் அவன், அதாவது ஷோலெம் ஷாச்னு, சொன்னான்: ''காஸ்ரிலெவ்கா!''

''எந்த வகுப்பு, மேதகு அவர்களே!'' டிக்கெட் வழங்குபவன் சிவப்புப்பட்டைத் தொப்பியைப் பார்த்தவாறே கேட்டான்.

ஷோலெம் ஷாச்னுவுக்கு முன்னைக் காட்டிலும் கோபம் அதிகமாயிற்று. 'அவனுக்கும் ஒரு மேதகு வழங்குகிறேன். அப்போதுதான் கிண்டல் பண்ணினால், பாவம், ஒரு யூதனுக்கு எப்படி இருக்கும் என்பது அவனுக்குப் புரியும்!'

கூடவே அவன் இவ்வாறும் எண்ணினான்: 'சரி, சரி, நாடு கடத்தப்பட்ட யூதர்களாகிய நாம் அடைக்கலம் தரும் தேசங்களிலெல்லாம் சிதறிக் கிடக்கும்போது கோபப்பட்டு என்ன பயன்? விட்டுத் தொலை!' — என்ன நான் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்களா? — அவன் மூன்றாம் வகுப்பு டிக்கெட் ஒன்று கேட்டான்.

''எந்த வகுப்பு!'' டிக்கெட் வழங்குபவன் அவனைப் பார்த்து வியப்புத் தாளாமல் விழித்தான். இம்முறை ஷோலெம் ஷாச்னுவுக்கு நன்றாகவே மனம் புண்பட்டுவிட்டது..... ''மூன்றாவது'' என்று அழுத்திச் சொன்னான்.

சுருக்கமாகக் கூறுவதென்றால் ஷோலெம் ஷாச்னு டிக்கெட்டை வாங்கிக் கொண்டு பையையும் தூக்கிக் கொண்டு பிளாட்பாரத்துக்கு ஓடினான். யூதர்களும் கனவான்களும் — ஒப்பு நோக்குவதற்கில்லைதான் — அடங்கிய கூட்டத்துக்குள் பாய்ந்தான்; மூன்றாம் வகுப்புப் பெட்டி ஒன்றைத் தேடி அலைந்தான். மறுபடியும் அந்தத் தொப்பி ஒரு மாயாஜாலமாக வேலை செய்தது. எல்லோரும் அவனுக்கு வழி விட்டார்கள். என்ன நடக்கிறது என்றே புரியவில்லை அவனுக்கு. ஆயினும் அவன் பிளாட்பாரத்தில் நீள ஓடிக்




கையில் விளக்கேந்தி வந்த ஒரு கார்டு தென்பட்டதும், ''இது மூன்றாம் வகுப்புத்தானே?'' என்று கேட்டபடியே பையை உள்ளே தள்ளிவிட்டு ஏறுவதற்காகப் படியில் ஒரு காலை எடுத்து வைத்தான்.

''ஆமாம், மேதகு அவர்களே!'' என்றான் கார்டு. ஆனால் அவனை ஏறவிடாமல் தடுத்தான். ''தயவுசெய்யுங்கள், ஐயா! இறுகப் பட்ட முஷ்டியைப் போல் இங்கே மக்கள் அடைந்து கிடக்கிறார்கள். ஊசி நுழைய இடமில்லை.'' அவன் ஷோலெம் ஷாச்னுவின் பையை வாங்கிக் கொண்டான். — என்ன நான் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்களா? — இனிய குரலில் உபசரித்தான்: ''இப்படி வாருங்கள்! மேதகு அவர்களே! உங்களுக்கு ஓர் இடம் கண்டுபிடித்துத் தருகிறேன்.''

'மேதகு அவர்களே! மேதகு அவர்களே! என்று இது என்ன சைத்தான் வேலை!' என்று ஷோலெம் ஷாச்னு எண்ணினான். ஆனால் இதுபற்றி அதிகமாகச் சிந்திக்க அவனுக்கு அவகாசம் இல்லை. தன் பையைப் பற்றிய கவலை அவனுக்கு! இப்படி மேதகு, மேதகு என்று கூறியே தலையைத் தடவிப் பையை அடித்துக் கொண்டு போய்விடுவார்களோ என்ற பயம்! எனவே, அவன் லாந்தருடன் விரையும் கார்டைப் பின்தொடர்ந்து ஓடினான். அவன் இவனை ஓர் இரண்டாம் வகுப்புப் பெட்டிக்கு அழைத்துச் சென்றான். இதுவும் கூரை வரை நிரம்பி வழிந்தது. கொட்டாவி விடக்கூட அங்கு யாருக்கும் இடமில்லை! ''இப்படி வாருங்கள், மேதகு அவர்களே!'' பையைப் பற்றிக்கொண்டு போகும் கார்டின் பின்னால் மின்னலெனப் பாய்ந்தான் ஷோலெம் ஷாச்னு.

அவன் இந்த மேதகு விஷயமாக மூளையைக் குழப்பிக் கொண்டாலும் முக்கியமான சமாசாரம் பை என்பதை மறவாமல் அதன் மீதே கண்ணாயிருந்தான். முதல் வகுப்புப் பெட்டியில் ஏறியதும் கண்டக்டர் பையைக் கீழே வைத்துவிட்டு, சல்யூட் அடித்தான். பிறகு குனிந்து மரியாதை செலுத்தியவாறே பின்னோக்கி நடந்து விடைபெற்றான். அப்பாடா! ஒரு வழியாக அவன் தனிமையில் விடப்பட்டான்.

ஷோலெம் ஷாச்னு தன்னைச் சுதாரித்துக் கொள்வதற்காகச் சுற்றுமுற்றும் பார்த்தான்— என்ன நான் சொல்வதைக் கேட்கிறீர்களா?—



மனைவி: நீங்கள் எழுதி அனுப்புவதெல்லாம்திரும்பி வந்துவிடுகிறதே !

எழுத்தாளர் : திரும்பி வராத ஒன்றும் எழுதி அனுப்பி விட்டேன். என்ன தெரியுமா ? பத்திரிகைச் சந்தாத் தொகைக்கு செக் !

மனைவி: நாசமாய்ப் போச்சு, அந்தச் செக்கும் திரும்பி வந்து விட்டது !

---

இந்தத் திமர் மரியாதை யெல்லாம் ஏன் என்பது அவனுக்கு இன்னமும் புரியவில்லை. முதல் வகுப்பு ! ஸல்யூட்கள் ! மேதகு அவர்களே !

'கனவு காண்கிறேமா?' ஷோலெம்ஷாச்னு நெற்றியை வருடிக் கொண்டே ரயில் பெட்டியினுள் நடைபாதையில் சென்றபோது சுவரில் மாட்டியிருந்த நீலக் கண்ணாடியை ஒரு நோட்டம் விட்டான். அவன் கண்டது அவனை மூர்ச்சை அடையச் செய்துவிடும் போலிருந்தது. அங்கு அவன் தன்னைப் பார்க்கவில்லை! சிவப்புப் பட்டையுடன்கூடிய அதிகாரியைப் பார்த்தான். 'ஓ! அவனு இங்கு வந்திருப்பது? அந்த முட்டாள் போர்ட்டர் தூர்ச் சொப்பனங்கள் கண்டு துயர் அடையட்டும் ! இருபது தடவை சொன்னேன், என்னை எழுப்புடா என்று! காசு கூடக் கொடுத்தேன். அந்தக் கடாமாடு என்ன செய்தது? என்னை எழுப்புவதற்குப் பதில் அந்த உயர் அதிகாரியைப் போய் எழுப்பி விட்டிருக்கிறது ! நான் அங்கேயே அந்த விசுப் பலகையில் இன்னமும் தூங்கிக் கொண்டிருக்கிறேன்! ஷோலெம் ஷாச்னு! அட, அதிர்ஷ்டக்கட்டையே ! பாஸோவர் பண்டிகையை நீ ஸோலோடைவ்காவில் தான் கொண்டாடப் போகிறாயா? வீட்டுக்குப் போகப் போவதில்லையா?'

இதைக் கேளுங்கள்! — ஷோலெம் ஷாச்னு தன் பையைத் தூக்கிக் கொண்டு மறுபடியும் ஓடினான்! நேரே ஸ்டேஷனில் தான் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கும் விசுப் பலகையை அடைந்தான். கடவுள் கிருபை இருந்தால் அவன் ரயில் கிளம்புவதற்கு முன்னால் தன்னைத் தானே எழுப்பிக் கொண்டுவிடுவான். ரயில் அவசரப்பட்டுக் கூவென்று ஊதி அவன் பாஸோவர் பண்டிகையை ஊதித் தள்ளிவிடாதிருக்க வேண்டும் ! ஆனால் அப்படித்தான் நடந்தது. ஷோலெம் ஷாச்னு தன் பையுடன் ரயில் பெட்டியிலிருந்து கீழே குதித்தானோ இல்லையோ, எஞ்சின் கூவென்று ஊதிக் கொண்டு புறப்பட்டு விட்டது !

இத்துடன் முடிந்ததா? அப்புறம் நடந்ததைக் கேளுங்கள். அவனுக்கு ஒரு மனைவி— அதாவது ஷோலெம் ஷாச்னுவின் மனைவி — அவளை எப்படி வர்ணிப்பது? எனக்கு ஒரு மனைவி இருக்கிறாள். உங்களுக்கும் மனைவி உண்டு. ஆக நாம் எல்லோருமே சொர்க்கத்தை ருசி பார்த்திருக்கிறோம். கல்யாணமானவன் கதி என்ன என்பது நமக்குத் தெரியும். ஆனால் நான் சொல்ல வருவது என்ன வென்றால் ஷோலெம் ஷாச்னுவின் மனைவி முதல்தரமானவள். அதனால் அவள் அவனுக்கு ராஜோபசார வரவேற்பு அளித்தாள்! வெளுவெளுவென்று வெளுத்து வாங்கிவிட்டாள் ! அவன் விடுமுறையின்போது வீட்டில் இருக்கவில்லை என்பதற்காகக் குறைப்பட்டுக் கொண்டாள் என எண்ணுகிறீர்கள். அவன் அந்தச் சிவப்புப் பட்டையுடன்கூடிய தொப்பி பற்றியும் ஏதும் கூறவில்லை. அதை யெல்லாம் பின்னால் பார்த்துக் கொள்ளலாம்; அவசரமில்லை. இப்போது அவன் அந்தத் தந்தியைப் பற்றிச் சொல்லித்தான் பழி வாங்கினாள். தந்தியைப் பற்றிக்கூட இல்லை — என்ன கேட்டுக் கொண்டிருக்கிறீர்களா ? — அதில் இருந்த ஒரு வார்த்தையைப் பற்றித்தான் : 'நிச்சயமாக' என்ற சொல்லைக் குறித்துத்தான்! அப்படி ஒரு தந்தி அனுப்புமாறு அவனை எந்தச் சைத்தான் ஆட்கொண்டது? 'பாஸோவருக்கு வீட்டுக்கு வருகிறேன், நிச்சயமாக!' தந்தி இலாகாவுக்கு இப்படிப் பணத்தை யாராவது வாரி விடுவார்களா ? மனிதனாய்ப் பிறந்த ஒருவன் நிச்சயமாக என்ற வார்த்தையைப் பயன்படுத்த எப்படித் துணியலாம் ? அவள் வார்த்தைகளால் அவனுக்குச் சமாதி கட்டி விட்டாள் என்றே சொல்லலாம். அது சரி, அதற்காகத்தானே மனைவிமார்கள் இருக்கிறார்கள் !

ஆனால் இதை ஒன்றுமில்லை என்றுதான் கூற வேண்டும், ஊராரிடம் அவனுக்குக் கிடைத்ததுடன் ஒப்பிடும்போது. அவன் வந்ததும் வராததுமாக காஸ்ரிலேவ்கா முழுதும் போர்ட்டர் விஷயமும், தொப்பி விவகாரமும் மேதகு சமாசாரமும் பரவி விட்டது. ஷோலெம் ஷாச்னு, தான் சென்ற இடங்களிலெல்லாம் அப்படி யொன்றும் நடக்கவில்லை என்றும் ஊரில் உள்ள போக்கிரிகள் வேலையற்றுப் போய்க் கதை கட்டி விட்டிருக்கிறார்கள் என்றும் சத்தியம் செய்தான். தான் ஊருக்குத் தாமதமாக, விடுமுறைக்கு அப்பால் வந்ததற்குக் காரணம், கானகத்தை உள்ளடக்கிய ஒரு பெரிய பண்ணையைப் பார்வையிட விசேஷப் பயணம் மேற்கொண்டதுதான் என்று கூறிப் பார்த்தான். ஆனால் இந்தக் கப்஺ஸாவை வாங்குவார் இல்லை. காடாவது ? பண்ணையாவது? சாலையில் அவனைச் சுட்டிக்காட்டி இடுப்பைப் பிடித்துக் கொண்டு அவர்கள் சிரித்தார்கள். 'ஷோலெம் ஷாச்னு! சிவப்புப் பட்டைத் தொப்பி அணிந்தால் என்னென்ன எண்ணங்கள் எழும்?' என்று கேட்டார்கள். வேறு சிலர், 'முதல் வகுப்புப் பயணம் எப்படி இருக்கும்?' என்று வினவினார்கள். குழந்தைகளுக்கோ ரொம்ப வசதியான வார்த்தைகள் அகப்பட்டு விட்டன ! — என்ன கேட்டுக் கொண்டிருக்கிறீர்களா ?—அவன் போகுமிடமெல்லாம் சிறுவர் சிறுமியர் பட்டாளமாகப் பின்தொடர்ந்தார்கள். 'மேதகு அவர்களே ! மேதகு அவர்களே !' எனக் கூச்சலிட்டார்கள்.

காஸ்ரிலேவ்கா வாசிகளையா ஏமாற்ற முடியும் ?

ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம் :

**கி. ராஜேந்திரன்**

**கடக—மகர சங்கமத்தால் தாம்பத்ய உறவு இனிக்கும்**
**லால்பாயின் பச்சை—இளஞ்சிவப்பு இணைந்தால்**
**அதிர்ஷ்டம் உதிக்கும்!**

**லால்பாய்—அதிர்ஷ்டப் பொருத்தம் அளிப்போர்**

லால்பாயின் மோஸ்தர்களிலும் நெசவுகளிலும் உங்கள் அதிர்ஷ்ட ராசிக்கு ஏற்ற அருமையான வண்ண ஜாலங்கள் ஜொலிக்கின்றன! அவற்றை அகமகிழ்ந்து அணியுங்கள். அவை அதிர்ஷ்டத்தை அளிப்பதோடு, அதிநவீன பாவனைகளும் விளங்குகின்றன. தேர்ந்தெடுக்கத்தான் எத்தனை தரமுயர்ந்த ரகங்கள்! எவருக்கும், எல்லோருக்கும், எழில் கொஞ்சும் பொருத்தங்கள்! ஏழு மடங்கு வகைகளை வேறு எவரால்தான் வழங்க முடியும்?

[illegible]




ஏழு மில்களின் ஏற்றமிகு துணி வகைகள்

CMLB-23-182 TAM

M/s. வெங்கடேஷ், 243, 244, என்.எஸ்.ஸி. போஸ் ரோடு, சென்னை-1
M/s. ஆனந்த் டெக்ஸ்டைல்ஸ், பெரிய கடை வீதி, திருச்சி-8
M/s. ஈஸ்வரீஸ், 26-பி, மேற்கு டவர் தெரு, மதுரை-1



Criterion KM 2948 TMB

# ராஜாஜியின் ஜெயில் டைரி

சிப்பாய், ''அப்பாவு! அப்பாவு!'' என்றோ, ''நாகய்யா! நாகய்யா!'' என்றோ கூப்பிடுவான். பிறகு கைதி தன் அறையிலிருந்தபடியே சிப்பாயுடன் பேசிக் கொண்டிருப்பான். சிறைக் காவலாளிகள் மரண தண்டனைக் கைதிகள் விஷயத்தில் சிறிது தாராள மனப்பான்மையுடன் நடந்து வந்தார்கள். ஏனென்றால் அந்தக் கைதிகளுக்கு இனி விமோசனமே கிடையாதல்லவா?

''நாகய்யா சுவர்க்கத்தில் கடவுளுடன் நல்ல சாப்பாடு சாப்பிட்டுக் கொண்டிருப்பான்'' என்று சிப்பாய் சில தினங்களில் கூறுவான். சிறைகளில் சாப்பாடுதான் முக்கிய விஷயம்! சிறைக்கு வரும் எவரும் இதைத் தெரிந்துகொள்ளலாம்.

சிறையில் நிகழும் அநாகரிகமான விஷயங்களில் ஒன்றை உடனே சீர்திருத்த வேண்டியது மிகவும் அவசியம். முன்னெச்சரிக்கையின்றிக் கைதிகளைக் கழுவிலேற்றும் விஷயம்தான் அது. பாவம்! அந்தக் கைதிக்குத் தன்னை எப்போது தூக்கிவிடுவார்கள் என்னும் விஷயம் தெரியாது. அவனை வாரக் கணக்கிலும், சில சமயங்களில் மாதக் கணக்கிலும் சிறையிலேயே வைத்திருப்பார்கள். அதுவரை மேல் நியாய ஸ்தலங்களில் 'அப்பீல்'கள் விசாரிக்கப்பட்டு வரும். பிறகு மாகாண சர்க்காருக்கும் மத்திய சர்க்காருக்கும் அனுப்பப்படும் மனுக்கள் பரிசிலனை செய்யப்பட்டு வரும். இவைகளின் முடிவு தெரிவதற்கு வெகு காலம் ஆகும். அதற்குள் கைதி தான் மரணத்தின் சமீபத்தில் இருப்பதை நிச்சயப்படுத்திக் கொண்டு விடுகிறான். மரணத்தினின்று தப்ப முடியும் என்ற நம்பிக்கை போன பின்பு, அவன் திருந்துவது எங்கே?

அது மட்டுமல்ல; பிரார்த்தனை செய்யவோ, அல்லது கடவுளைப் பற்றி நினைக்கவோ அவகாசம் கொடுக்காமல் அவனைத் தூக்கு மரத்துக்கு இழுத்துச் சென்று விடுகிறார்கள். கைகால்களைக் கட்டி, முகத்தை மறைத்து, அவன் சற்றும் எதிர்பாராத சமயத்தில் அவனைத் தூக்கிலிட்டு விடுகிறார்கள். உறவினர்களுக்குக் கூட அநேகமாக இந்த விஷயம் தெரிந்திருக்காது. ஆகவே பிரேதத்தை எடுத்துப் போகவும் அவர்கள் வரமாட்டார்கள். ''ஒருவரும் வந்து எடுத்துக் கொள்ளவில்லை'' என்று குறித்துக்கொண்டு அதை வேறு காரியங்களுக்குப் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள். வைத்தியக் கல்லூரிக்கு, பரிசோதனைக்காக எடுத்துச் செல்லப்படுவதாகத் தோன்றுகிறது.

அரசாங்க ஊழியர்களுக்குக் கைதிகளின் மத உணர்ச்சி பற்றியோ அவர்களுடைய கடவுள் பிரார்த்தனைபற்றியோ அக்கறை எங்கிருந்து உண்டாகப் போகிறது? அரசாங்க உத்தரவு வந்தால்தான் அவர்கள் இவ்விஷயத்தில் அக்கறை செலுத்துவார்கள். அப்பொழுதும், எதேச்சாதிகாரக் கட்டுப்பாட்டுக்காகத்தான் செய்வார்களே யன்றி உள்ளுணர்ச்சியுடன் செய்ய மாட்டார்கள்.



நைனு மலைக் கோனன் அனுப்பிய மனுவை மாகாண சர்க்கார் நிராகரித்து விட்டார்கள். பாவம்! நைனு மலைக்கு இருபது வயதுதான் ஆகிறது. அவனுக்கு விரோதமான சாட்சியமும் குறைவுதான். அதுவும் சந்தர்ப்பச் சாட்சியம். அவன் வைத்திருந்த நகைகள் இறந்து போன ஸ்திரீ அணிந்திருந்த வையா யிருக்கலாம். ஆனால் அவன் தான் அவளைக் கொன்றான் என்பது என்ன நிச்சயம்? அந்த நகைகளை அவன் வேறு யாரிடமிருந்தாவது பெற்றிருக்கலாம் அல்லவா? இந்தக் குற்றம் சாட்டப்படும் வரை நல்ல குணமுடையவன் என்று பெயரெடுத்திருந்த இந்த இருபது வயது வாலிபனுக்கு ஒரு சந்தர்ப்பம் அளித்திருக்கலாம். இருபது வருஷங்களுக்குச் சிறைவாசம் அனுபவித்துவிட்டு நாற்பதாவது வயதிலாவது அவன் சிறையிலிருந்து வெளியே வரும்படி செய்திருக்கலாம்.

# ஒன்றிவிட்ட இதயம்

எஸ்ட்ரட் டு ரோஸிமி ஜோன்ஸ்

"நல்லது: இந்த ஏற்பாடு மிகத் திருப்திகரமாகத்தான் இருக்கிறது!" என்று ஆப்பிரிக்கக் கறுப்பு இனத்தின் தலைவரான பா டெம்பா, (வெள்ளைக்கார) ஆங்கிலேயக் கலெக்டர் டல்லக்கை நோக்கிக் கூறினார். அதைத் தொடர்ந்து, "நீ மேரிக்குக் கணிசமான தொகை அளிக்க ஏற்பாடு செய்திருக்கிறாய். உன்னைவிட நியாயமாக யாரும் நடந்து கொள்வார்கள் என்று எனக்குத் தோன்றவில்லை. மேரிக்கு ஆண்டுக்கு நூறு பவுன்களும், பையனுக்கு நல்ல படிப்புக்கும் ஏற்பாடு. இதைவிட அதிகமாக யாருமே செய்ய மாட்டார்கள்" என்று டல்லக்கை வெகுவாகப் பாராட்டினார். பிறகு மேரி பக்கம் திரும்பி, "மேரி! இத்தனை நாட்கள் நீ ஜில்லா கலெக்டர் டல்லக்கைக் கணவராகப் பெற்றிருந்ததையும்; அவர் இப்பொழுது உன் எதிர்கால வாழ்வுக்காகச் செய்துள்ள ஏற்பாட்டினையும் பார்க்கும்போது நீ எவ்வளவோ அதிர்ஷ்டசாலி என்று சொல்ல வேண்டும். நம் நாட்டுப் பெண்களில் எத்தனையோ பேர் வெள்ளைக்கார ஆடவர்களின் பசப்பு வார்த்தைகளில் மயங்கிக் கடைசியில் ஏமாந்து அனாதரவாக விடப்பட்டிருக்கிறார்கள். அவர்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது நீ எவ்வளவோ பாக்கியசாலி. உனக்கும் உன் குழந்தைக்கும் உன் கணவர் வேண்டிய பணம் வைத்திருக்கிறார். மேலும், உனக்கு இன்னோர் உரிமையும் இருக்கிறது. இனி நீ யாரை வேண்டுமானாலும் மணந்து கொள்ளலாம். ஆகவே, இந்த ஏற்பாட்டில் உனக்குச் சம்மதந்தானே? சொல்லு. நான் சாட்சிக் கையெழுத்துப் போடப் போகிறேன்" என்றார் பா டெம்பா.

மேரி தனது அங்கீகாரத்தை மௌனமாகத் தலையை அசைத்துத் தெரிவித்தாள். அப்பொழுது அவளது இரு கண்களிலும் தேங்கி நின்ற கண்ணீர் அவளது கறுத்த கதுப்புக் கன்னங்களின் வழியே உருண்டு விழுந்தது. டல்லக் தனது ஆபீஸ் ஜன்னல் பக்கம் திரும்பி நகரத்தின் எல்லையை உற்றுப் பார்ப்பது போல் தன் கவனத்தைத் திருப்பி மேரியைப் பார்க்காமல் நின்றான். அங்கு ஒரு நாற்காலியில் மேரி உட்கார்ந்து கொண்டிருந்தாள். அவளுடைய மகன் அவளது இரு முழங்கால்களிடையே நின்று கொண்டிருந்தான். குழந்தையின் தலையை நீவியபடி அவள் சோகமே உருவாய் அமர்ந்திருந்த காட்சி டல்லக்குக்கு அளிக்கப்பட்ட மௌனத் தண்டனையாகத் தோன்றிற்று. அவள் தாய்மையின் உருவமாக அமர்ந்திருந்தாள்.

டல்லக்கின் சிந்தனை தீவிரமாக ஓடியது: 'இவளும் நானும் உள்ளத்தால் ஒன்றுபட்டு இணைந்து வாழ்ந்தோம். எங்கள் இணைப்பின் பலனாக இவன் பிறந்தான். இப்பொழுது என் வாழ்வில் பங்கு பெற்ற இவளையும், என் அருமைக் குழந்தையையும் இங்கேயே விட்டுவிட்டு என் தாய்நாட்டுக்குச் செல்லப் போகிறேன். இது தவிர்க்க முடியாதது. மேரிக்கும் எனக்கும் உள்ள பிணைப்பைத் துண்டித்துத் தானாக வேண்டும். இது நீசத்தனம்தான்! ஆயினும் இந்த முடிவு தவிர்க்க முடியாததாயிற்றே!'

மேரியோ, தன் பிள்ளையின் தலை மயிரைக் கோதிவிட்டுக் கொண்டிருந்தாள். அது பட்டுப் போன்று மிருதுவாகவும் பளபளப்பாகவும் இருந்தது. இந்த விஷயத்தில் மட்டுமாவது தன் பிள்ளை, டல்லக்கை ஒத்திருந்தானே என்பதில் அவளுக்கு அளவுகடந்த மகிழ்ச்சி. டல்லக் தன்னை விட்டுப் போவதில் அவள் எவ்வித கசப்புணர்ச்சியோ வெறுப்போ அடையவில்லை. துயரம்தான் — சொல்லி முடியாத துயரம்தான் அனுபவித்தாள். அவனைக் கணவனாக அடைந்ததிலிருந்தே அவளுக்குத் தெரியும் இந்தக் கட்டம் ஒரு நாள் வரத்தான் போகிறது என்று. மரணம் எப்படித் தவிர்க்க முடியாததோ, அம்மாதிரி இவள் கொண்டிருந்த இந்த உறவிலும் பிரிவு என்பது தவிர்க்க முடியாததுதான். சாவு தவிர்க்க முடியாத ஒன்று என்று தெரிந்திருந்தும், அது வரும்போது நாம் திடுக்கிடுகிறோம்; துயருறுகிறோம். அதேபோல்தான் இந்தப் பிரிவிலும்.

மேரி அவனைக் கைப் பிடித்ததிலிருந்து ஆனந்த மயமான வாழ்க்கையை அநுபவித்தாள். அவளுக்கும் அவன் உறவு இனிக்கும் உறவாகவே இருந்தது. இருவரும் நடத்திய எட்டாண்டு இணைபிரியா இல்வாழ்வு ஓர் இலட்



# தென் ஆப்பிரிக்கக் கதை

[மனித மனம்தான் எத்த[illegible] விசித்திர-மானது! அது இன்னொரு [illegible]டன் ஒன்றுபடும்போது நிற [illegible]றுமை, இன வேற்றுமை எதையும் [illegible] பார்ப்ப-தில்லை. ஆப்பிரிக்க நாட்டிக் [illegible] யேறிய பிரிட்டிஷார் தங்க[illegible]க்கெனக் காலனிகள் ஏற்படுத்திக் கொண்[illegible]த நாட்டுக் கறுப்பு இனத்தவர்களுடன் தொடர்பு கொண்டனர்; சட்டம் அந்தத் தொடர்பைத் துண்டித்தாலும் ஒன்று-பட்ட மனங்கள் பிரிவிலும் இணைந்தே இருந்தன. அத்தகைய ஒரு மனப் போராட்டத்தை அழகாகச் சித்திரிக்கிறது இந்தக் கதை.]

சிய வாழ்வாகவே திகழ்ந்தது. மேரியும் டல்லக்கும் சட்டபூர்வமாக மணம் புரிந்து கொண்ட தம்பதியல்ல வென்றாலும், எல்லோரும் அவளை 'மேரி டல்லக்' என்றே அழைத்தார்கள்.

இந்த இன்ப வாழ்வின் இறுதிக் கட்டம் நெருங்கி விட்டது. டல்லக் சர்க்கார் வேலையை விட்டுவிட்டுத் தன் தாய்நாடான இங்கிலாந்துக்குச் செல்கிறான். அங்கு தன் தந்தையின் வக்கீல் வேலையைத் தான் ஏற்கப் போகிறான். இத்தனை ஆண்டுகள் ஆப்பிரிக்காவில் அவன் பெற்ற அநுபவ அறிவுச் செல்வத்தை உடன் கொண்டு செல்கிறான். ஆனால் மேரி? அவளை அழைத்துச் செல்ல முடியாதே? அதனால்தான் அவளையும் குழந்தையையும் அங்கேயே விட்டு விட்டுச் செல்லவேண்டியிருக்கிறது.

சாதாரணமாக ஒரு வெள்ளைக்காரன் ஒரு கறுப்புப் பெண்ணுடன் உறவு கொண்டுவிட்டு அவளை ஒதுக்கும்போது என்ன தொகை கொடுப்பானோ, அதைவிடப் பன்மடங்கு அதிகமாகவேதான் மேரிக்கு டல்லக் கொடுத்தான். அப்படித் தாராள மனதுடன் நேர்மையாக நடந்து கொண்டிருந்தும் அவன் மனச்சாட்சி அவனை உறுத்தியது. 'நீ ஒரு நீசன், இழிஞன்' என்று.

வெள்ளையருக்கு ஒரு நீதி, கறுப்பர்களுக்கு ஒரு நீதி என்பதை அறவே வெறுத்தான்; மனிதப் பிறவியில் நிற வேற்றுமை பார்ப்பதை அவன் மனச்சாட்சி ஏற்கவில்லை. நீதி என்றால் அது மானிடர்கள் அனைவருக்கும் சமமானதா யிருக்க வேண்டும் என்பதைப் பரிபூரணமாக நம்பினான். மேரி மட்டும் ஆப்பிரிக்க நாட்டுப் பெண்ணா யில்லாதிருந்து, வெள்ளையர் இனத்தைச் சேர்ந்தவளா யிருந்திருந்தால், அவளை இவ்வளவு சுலபமாகத் தன்னிடமிருந்து விலக்கியிருக்க முடியுமா? என்று சிந்தித்துப் பார்த்தபோது அவனுக்கு வேதனையாக இருந்தது. தான் விரும்பிய தொகையைக் கொடுத்து அவளைச் சுலபமாகத் துறந்துவிட முடிகிறது என்ற எண்ணமே அவனை வாட்டி வதைத்தது.

அரசாங்க நிர்வாகத்தின் தந்தை என்று கருதப்பட்ட பெரியார் புரோதேரோ. அவர்தான் இப்பொழுது டல்லக்கின் பிரச்னையைத் தீர்த்து வைத்திருக்கிறார். ஆனால் அவருக்கு டல்லக்கின் மன உளைச்சல் புரியவில்லை. இவளை ஒதுக்குவதில் என்ன பிரச்னை இருக்கிறது? டல்லக்கின் தோளின்மீது கையை வைத்து, ''தம்பி! எனக்கும் ஒரு கறுப்பு மனைவி இருந்தாள்; குழந்தைகள் இருந்தனர். நான் பணியாற்றிய ஒவ்வொரு ஜில்லாவிலும் இருந்தனர். இந்த விளையாட்டில் அனுசரிக்க வேண்டிய விதி, இவ்விஷயத்தில் உன் இதயத்தை ரொம்பவும் சிக்க வைத்துவிடக்கூடாதென்பது ஒன்றுதான். ஒரு ஜில்லாவில் சிநேகம் கொண்ட பெண்ணுடன் அடுத்த ஜில்லாவுக்குப் போகக் கூடாது. அப்படிச் செய்தால் முடிவில்லாத தொல்லைதான். ஒவ்வொரு ஜில்லாவை விட்டு வரும்போதும் வேண்டிய பணத்தைக் கொடுத்துக் கையைக் கழுவிக் கொண்டு விடுவேன். ஒரு பிரச்னையும் எழுந்ததில்லை. அவர்களுக்கும் மொத்தமாகப் பணம் கிடைத்ததில் மகிழ்ச்சிதான். உள்ளூர்க்காரர்கள் அவளை அப்படியே கொத்திக் கொண்டு போய்விடுவார்கள். ஆகவே, தம்பி இதைப் பற்றி மனக் கிலேசம் அடையாதே. மேரிக்குப் பணம் கொடுத்து அனுப்பிவிடு. உன்னை விரைவிலே மறந்து விடுவாள். நீயும் கப்பல் தளத்தில் அடியெடுத்து வைத்தவுடன் அவளை மறந்து விடுவாய்!'' என்றார்.

டல்லக்குக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் காலனி ஆட்சி சம்பந்தப்பட்ட ஒவ்வொரு சின்னஞ் சிறு விதிகளிலும் முறைகளிலும் மிகுந்த அக்கறை செலுத்தும் புரோதேரோ, இதயம் சம்பந்தப்பட்ட விஷயத்தில் எவ்வளவு அலட்சியமாக இருக்கிறார் என்பதை நினைத்தபோது அவனுக்கு வியப்புத் தாங்கவில்லை. இருப்பினும் அவரை எடை போடத் தான் யார் என்று தனது தார்மீக சிந்தனை ஓட்டத்தைக் கட்டுப்படுத்தி நிறுத்தினான். பார்க்கப் போனால் அவன் புரோதேரோவைவிட எந்த விதத்திலும் மேலானவன் அல்ல; ஏன் கீழானவன் என்றே எண்ணினான். அவர் கறுப்புப் பெண்களுடன் தொடர்பு கொண்டபோது, தாம் தர்மத்துக்குப் பங்கம் விளைவிப்பதாக நினைக்கவே இல்லை. தார்மீக நெறிகளைப் பற்றிச் சிந்திக்கவே யில்லை. ஆனால் தானோ, தான் செய்வது தவறு, தவறு என்று உள்ளம் அறிந்தே தவறு செய்திருக்கிறான்! எனினும் புரோதேரோவின் யோசனையைக் கேட்டு மேரிக்குத் தக்க ஏற்பாடு செய்திருக்கிறான். மேரிக்குச் சட்ட ரீதியான பாதுகாப்பு அளிக்க மிகுந்த பிரயாசைப் பட்டிருக்கிறான். தன் மனச்சாட்சியை அரை குறையாகவாயினும் திருப்தி செய்ய எடுத்துக் கொண்ட முயற்சி. இதுதான் அவனால் செய்ய முடிந்ததெல்லாம்.

பாடெம்பா, தம் கையெழுத்தைப் பதித்தார்; எழுந்திருந்தார்; விடைபெற்றுக் கொண்டார். போகும்போது டல்லக்கின் பெருந்தன்மையைப் பாராட்டிக் கொண்டே சென்றார். மிச்சம் இருந்த மூவரும் மௌனமாக உட்கார்ந்திருந்தனர். அவர்களுக்குள் பேசிக்கொள்ள ஒன்றுமே இல்லை போல் தோன்றியது. டல்லக் சொல்லிமுடியாத அவமானத்தால் வாயடைத்து நின்றான்; மேரி சொல்லி முடியாத துயரத்தில் மூழ்கிச் சிலையாக அமர்ந்திருந்தாள். சிறுவன் தம்பா பயப் பிராந்தியில் நின்றான். தன் தாயாரின் கண்களிலிருந்து பெருகும் கண்ணீருக்குத் தன் தந்தை டல்லக்தான் காரணம் என்று குழந்தைக்குத் தெரிகிறது. ஆனால் எப்படி என்பது தான் விளங்கவில்லை.

''மேரி! உன்னுடைய சாமான்களை உன் மாமா வீட்டுக்குக் கொண்டு போக ஆட்களை ஏற்பாடு செய்திருக்கிறேன். போய் வருகிறேன் மேரி. நான் போயே ஆக வேண்டும் என்பதுதான் உனக்குத் தெரியுமே மேரி! நான் வரட்டுமா?''

மேரி தலையசைத்தாள்; புன்முறுவல் புரிய முயன்றாள். திடீர் என்று கதவுப் பக்கம் திரும்பினாள்; தம்பாவின் கைகளைப் பற்றிக்கொண்டாள். வேகமாக நடந்து வெளியேறினாள். அவள் ஒருமுறைகூடத் திரும்பிப் பார்க்காமல் நேரே தெருவில் நடந்து போவதை டல்லக் பார்த்துக் கொண்டே யிருந்தான். அப்

போது, தன் இதயத்தின் ஒரு பகுதியும் அவளுடன் சென்று விட்டதை உணர்ந்தான்.

*　　*　　*

பிரவார் டல்லக், இங்கிலாந்துக்குத் திரும்பிப் போவதென்று செய்த முடிவு, ஏதோ திடீர் என்று செய்த முடிவல்ல. மூன்று ஆண்டுகளுக்கு முன்பே, இங்கிலாந்தில் தன் தந்தையின் மிகப் பழைய நண்பரான ஒரு ஸ்டாக் புரோக்கரின் மகளுடன் டல்லக்குக்குக் கல்யாணம் நிச்சயமாகி யிருந்தது. எதையும் விழுங்கி ஏப்பம் விடக் கூடிய மனித மனம் ஒன்றுதான் இப்படி முற்றிலும் மாறுபட்ட இரண்டு பெண்களை ஏற்க முடியும்! மேரி, ஆப்பிரிக்க நாட்டுக் கறுப்பி, படிப்பு வாசனையே இல்லாதவள்; அழகாகப் பேசுவாள்; இரக்கமும் அன்பும் மிக்கவள். டல்லக்குக்காகவே, அவனுக்குப் பணிவிடை செய்யவும், அன்பு செலுத்தவுமே தான் படைக்கப்பட்டதாகக் கருத்துக் கொண்டவள். டென்னிஸ் இங்கிலீஷ்காரி. நவநாகரிகமானவள்; மெத்தப் படித்தவள். அவளது அரசியல் கட்சியின் மத்தியக் காரியாலயத்தில் மிக முக்கியமான பொறுப்பு வகிப்பவள். எப்பொழுதும் எச்சரிக்கையாகவும் துடியாகவும் இருப்பவள். ஒவ்வொரு விஷயத்தைப் பற்றியும் உறுதியான அபிப்பிராயம் கொண்டவள். முக்கியமாக பெண்களின் உரிமைகள் விஷயத்தில் மிகத் தீவிரமான கருத்துக்கள் கொண்டவள். அவனுக்கும் டல்லக்குக்கும் திருமணம் நிச்சயிக்கப்பட்டபோதே, இங்கிலாந்து வாழ்க்கையை விட்டு ஆப்பிரிக்கக் காடுகளில் மறைந்து வாழத் தான் விரும்பவில்லை என்று மிகத் தெளிவாகக் கூறி விட்டாள். ஆகவே, அவளைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்றால், இங்கிலாந்துக்குத் திரும்பியே ஆகவேண்டும். இந்த முடிவை எவ்வளவு நாள் தள்ளிப் போட முடியுமோ அவ்வளவு நாட்கள் டல்லக் தள்ளிப் போட்டான். இப்பொழுது அவன் தாயாரிடமிருந்து வந்த கடிதம் இனியும் தள்ளிப் போட முடியாத நிலையை ஏற்படுத்தி விட்டது. தாய்நாட்டுக்குத் திரும்பத் தீர்மானித்தான்.

கப்பல் பிரயாணம் தொடங்கியபிறகு அவனால் எதிர்காலத்தைப் பற்றி நினைக்காமலிருக்க முடியவில்லை. மேரியின் உருவம்தான் டென்னிஸின் உருவத்தைத் தள்ளிக்கொண்டு அவன் நினைவுத் திரையில் மீண்டும் மீண்டும் வந்தது. அந்தக் குழந்தை யார்? தன் இரத்தத்திலும், சதையிலும் பங்கு கொண்டு பிறந்தவனல்லவா? மேரியைப் பற்றி நினைக்கக் கூடாது என்று எவ்வளவோ முயன்று பார்த்தான். அவளை மறக்க வேண்டியது தன் கடமை என்றுகூட நினைத்தான். முடிந்தால் தானே!

டென்னிஸ்! அவளைப் பற்றி நினைக்கத் தொடங்கியதும், அவளுடன் தன் உறவு எப்படி இருக்குமோ என்ற ஐயங்கள் எழலாயின. அதுவும் மிகவும் அடிப்படையான சந்தேகங்கள் எழலாயின. 'நான் உண்மையிலேயே டென்னிஸ்ஸை மணந்துகொள்ள விரும்புகிறேனா?' இந்தக் கேள்வியை மனத்தை விட்டு ஒதுக்கப் பார்த்தான். ஏனெனில், விரும்புகிறேனோ, இல்லையோ. அவளை மணந்து




கொண்டே ஆகவேண்டும். இது அவன் தலைவிதி. இந்த விதியை நினைத்த மாத்திரத்தில் அந்த விதியினின்று அவன் மனம் எவ்வளவு வேகமாகப் பின்வாங்கியதோ, அவ்வளவு வேகமாகக் கப்பலும் அந்த விதியை நோக்கி—இங்கிலாந்துக் கரையை நோக்கிச் சென்றது!

கப்பல் லிவர்பூல் துறைமுகத்தை அடைந்தது. டல்லக் கப்பலின் விளிம்புக் கைப்பிடிகளின் மீது சாய்ந்து கொண்டு கரையில் பார்வையைச் செலுத்தினான். தன்னை வரவேற்கத் தாயார் வந்திருந்தாள். அவள் பக்கத்தில்—ஆம். அவளேதான் – டென்னிஸ்! உடனே அவனுக்கு, இவளுக்கு நேர்மாறான உருவ அமைப்பும், நிறமும், தொள தொளப்பான உடையும் அணிந்த மேரியின் நினைவு வந்தது.

மேரியுடன் அவன் நடத்திய வாழ்க்கை எளிமையாகவும் அமைதியாகவும் இருந்தது. அவன் மேரியுடன் எவ்விஷயத்துக்கும் வாதாட வேண்டிய அவசியமே இருக்கவில்லை. அவன் கோரிக்கைக்கு அவள் எப்பவும் பணியத் தயாரா யிருந்தாள். அவர்களது கருத்து ஒருமித்த தாம்பத்திய வாழ்க்கை இன்பம் நிறைந்ததா யிருந்தது.

டென்னிஸ் சவலை புத்தி படைத்தவள். இது அவனுக்கு நன்றாய்த் தெரியும். அவளோடு தான் நடத்த இருக்கும் வாழ்க்கை ஒரே மனப் போராட்டமாக இருக்கப் போகிறது என்று நினைத்தான். ஆனால் முன்பு – அவன் கல்லூரி மாணவனாக இருந்தபோது—டென்னிஸின் இந்தக் குணமே அவளை அவனிடம் பெரிதும் ஈடுபடுத்தியது. அவளை வாழ்க்கைத் துணையாகக் கொண்டு வாழ நினைப்பதே இப்பொழுது முள்ளாய் உறுத்தி அவனை வேதனைப் படுத்தியது. தான் எவ்வளவோ மாறிவிட்டிருக்கையில் அவள் சிறிதும் மாறவில்லை என்பதை அவள் அவனுக்கு அளித்த வரவேற்பே விளக்கி விட்டது.

டல்லக் இந்த எண்ண அலைகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு பெட்டியைத் தூக்கிக் கொண்டான். நடைபாதை வழியாகக் கப்பலை விட்டுக் கரைக்கு வந்தான். 'ஓர் ஆண் மகன் எதிர்கால வாழ்க்கைக்கு அஞ்சுவதில் பயனில்லை. தைரியமாக ஏற்க வேண்டியதுதான்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டு டென்னிஸின் கன்னத்தில் ஒரு முத்தத்தைப் பதித்தான்.

தமிழாக்கம் : எஸ்.வி.எஸ்.

# போர் முடிந்தது போராட்டம் ஓயவில்லை

## இவான் பாஜோவ்



சிறு சந்தடி கேட்டதும் இவான் ரொலிச் மதிள் சுவரிலிருந்து தெருவில் குதித்துவிட்டான். சில கணங்கள் பிரமை பிடித்தவன் போல் நின்றான். பிறகு நாற்புறமும் கூர்மையாகத் தன் பார்வையை ஓட்டினான். காரிருள் கவிந்திருந்தது. வானத்தில் கார் முகில்கள் குவிந்திருந்தன. குளிர் காற்று 'விர் விர்' என்று வேகம் கொண்ட மட்டில் வீசிக் கொண்டிருந்தது. ஜன நடமாட்டமற்ற தெருவில் எங்கு நோக்கினும் அரவமே இன்றி அமைதி சூழ்ந்திருந்தது. அதைப் பேரமைதி என்று கூறுவதுகூடப் பொருந்தாது; மரண அமைதி. இடுகாட்டு மௌனம் என்றால்தான் ஓரளவு பொருந்தும்.

ரொலிச் கவலையில் தோய்ந்து இங்கும் அங்கும் வட்டம் அடித்தான். அவன் அந்தப் பகுதியிலிருந்து எப்படியாவது அடுத்த பகுதிக்குப் போய்விடத் திட்டமிட்டான். திடீரென்று ஒரு வீட்டுக்கு அருகில் வந்ததும் அவன் நின்றான். சுவரை ஒட்டினாற்போல் சில கரிய நிழல்கள் நிற்பது தெரிந்தது. அவன் மூச்சை அடக்கிக் கொண்டு பதுங்கி நின்றான். பிறகு வேகமாக ஒரு வீட்டின் கேட்டை நோக்கி நடந்தான். இருட்டில், எதுவும் புலப்படவில்லை. எனவே, தெரியாமல் தூங்கிக் கொண்டிருந்த ஒரு நாயை அவன் மிதித்து விட்டான்.

ரொலிச் குதித்த சத்தத்தையும், நாய் குரைக்கும் குரலையும் கேட்டுக் காவலாளிகள்




## பல்கேரியக் கதை

உஷார் ஆனார்கள். அவர்களுடைய ஆயுதங்கள் ஒலிக்கும் ஒலி செவியில் விழுந்தது. தொலைவில் இருந்தவண்ணமே யாரோ ஒருவன் துருக்கிய மொழியில், ''நில்!'' என்று கொடுங் குரல் எழுப்பினான். கிராவிச் விரைந்தோடத் தொடங்கினான்.

தொலைவிலிருந்து அதிகாரக் குரல் அதட்டியது : ''நில் ! இல்லாவிட்டால் சுட்டுவிடுவேன்!''

ஆயினும் அவன் நிற்கவில்லை.

அவனைக் குறி வைத்துப் பல குண்டுகள் பாய்ந்து வந்தன. ஆயினும் அவன் தப்பிவிட்டான். இருள் அவனை இரும்புக் கவசமாக நின்று காத்தது. அவன் கால் போன போக்கில் தலை தெறிக்க ஓடிக் கொண்டிருந்தான்.

அவன் வெகுதூரம் ஓடி வந்து விட்டான். அவனுக்கு மூச்சு வாங்கியது. ஓடி வந்த களைப்பில் கால்கள் கெஞ்சின. ஒவ்வோர் அடி எடுத்து வைக்கும்பொழுதும் எப்பொழுது விழுவோமோ என்றே எண்ணினான். கண்களைப் பறிக்கும் மின்னல் ஒளியில், கண் மூடிக் கண் திறக்கும் நேரத்துக்கு நாற்புறத்துச் சூழலும் ஒரு முறை பளிச்சிட்டன. அந்தக் கிராமத்திலிருந்து வெகுதூரத்துக்கு வெகுதூரம் வந்து விட்டோம் என்பதைக் கிராவிச் அப்பொழுது தான் உணர்ந்தான். கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் அவனைத் துரத்தி வந்தவர்களையும் காணோம். தட்டுத் தடுமாறித் தொப்பென்று ஒரு மரத்தடியில் உட்கார்ந்தான். துருத்திக் காற்றென அவனுக்கு மூச்சு வாங்கிக் கொண்டிருந்தது.

கொஞ்சம் களைப்பாறவும், புதிய காற்றைச் சுவாசிக்கவும் முடிந்ததால், கிராவிச்சுக்கு மீண்டும் எழுந்து நிற்கும் சக்தி வந்தது. பெரிய பெரிய தூற்ற

'இவான் கிராவிச் அப்படித் திருடன்போல் அந்தக் குடியானவனின் கட்டிடத்துக்குள் புகுந்தானே! எதற்காக? திருடவா?'

திருடர்கள் மட்டுமல்ல, அதர்மங்களை எதிர்ப்பவர்கள், சுதந்திரத்துக்காகப் போராடுகிறவர்கள் கூடப் பல சந்தர்ப்பங்களில் திருடர்களைப் போல்தான் பதுங்கி வாழ வேண்டியுள்ளது.

இமேக்ஸிஸ் பேக்லீவான் என்னும் கொடியவனின் உயிரைக் குடித்து மக்களுக்கு அச்சத்திலிருந்து விடுதலை வாங்கிக் கொடுத்தான் இவான் கிராவிச். அந்தக் கொடியவனை அடக்குமுறையின் ஓர் உருவகமாகத்தானே அவனால் கருத முடிந்தது!

லாக விழவே, மழை — காற்றிலிருந்து தப்பு வதற்காக அவன் மீண்டும் நடக்கலானான்.

சிறிது தூரம் போவதற்குள்ளேயே மழை வலுவாகப் பிடித்துக் கொண்டது. கிராவிச் தெப்பமாக நனைந்து விட்டான். சாரல் கண் பார்வையை மறைத்தது. அவன் நடையில் வேகத்தைக் கூட்டி ஓடினான். அருகில் எங்கிருந்தோ உயரத்திலிருந்து நீர் விழும் ஓசை பெரிதாகக் கேட்டுக் கொண்டிருந்தது. சமீபத்தில் எங்கேயாவது நீர் இறைக்கும் இயந்திரம் இருக்க வேண்டும் என்று எண்ணினான். அப்பொழுது ஒரு மின்னல் வெட்டியது: பக்கத்தில் இருக்கும் நீர்த் தேக்கக் கட்டடத்தையும் காட்டிக் கொடுத்தது. அவன் அதை நோக்கி நடந்தான்.

கை வைத்ததும் கட்டடத்தின் கதவு திறந்து கொண்டது. அவன் சொட்டச் சொட்ட ஈரத்துடன் அந்தக் கட்டடத்தினுள் நுழைந்தான்.

அறையினுள் ஒரே இருட்டு. ஆள் இருக்கும் அரவமும் கேட்கவில்லை. அவன் சிறிது நின்று இளைப்பாறினான். வெளியே மழை நின்றுவிட்டிருந்தது. ஊதக் காற்றின் வேகம் கூடக் குறைந்திருந்தது. வான வீதியில் சந்திரன் கருமேகக் குவியல்களின் ஓரத்துக்கு வெள்ளி முலாம் பூசினான்; இரவுக்கும் ஓர் அழகு உண்டு என்பதைக் காட்டுவதுபோல் இருந்தது அந்தக் கறுப்பு வெளுப்புக் கலவை. அவன் நிம்மதியாக இளைப்பாற முற்பட்டான்.

வெளியே காலடி ஓசை கேட்டது. சட்டென்று கிராவிச் அங்கு வைத்திருந்த தானிய மூட்டைகளுக்குள் மறைந்து கொண்டான். அடுத்த கணமே விளக்கு எரிந்தது.

கிராவிச் மெதுவாக எட்டிப் பார்த்தான், உள்ளே நுழைந்த மனிதனை. உயரமும் உயரத்துக்கேற்ற பருமனும் கொண்ட நாட்டுப்புறத்தான் அவன். அவனோடு பதின் மூன்று — பதினான்கு பிராயமுள்ள ஒரு பெண்ணும் வந்தாள். துறுதுறுவென்றிருந்த அவள் சாதாரணமான சிவந்த உடை அணிந்திருந்தாள். அவள் அந்த நாட்டுப்புறத்தானின் மகள்.

பெண் வாசற் கதவைச் சாத்தித் தாளிட்டாள். அவளது செயல்களில் மழலை துறுதுறுத்தது. நீண்ட புருவங்களோடு கண்ணுமூச்சி விளையாடிய கரு வண்டு விழிகள் மாசற்ற எளிமை கூட்டி மின்னின.

"நல்ல வேளை! நாம் இயந்திரத்தை நிறுத்தினோமோ, பிழைத்தோமோ! இல்லாவிட்டால் இந்த நீர்ப் பெருக்கு இதை ஒடித்தே போட்டிருக்கும்! நாம் அங்கு போயிருந்த நேரத்திலே இங்கு திருடன்—கிருடன் நுழையாமல் இருந்தானே, அதுவும் நம் பாக்கியம்தான்!" என்றான் தந்தை.

ஒன்றும் பேசாமலே மரீகா அறையின் மறு முனையில் தனக்கும் தன் தந்தைக்கும் படுக்கத் தரையில் கம்பளியை விரித்தாள். பிறகு ஆண்டவனை வழிபட்டுவிட்டுக் கம்பளியில் படுத்து உறங்கிவிட்டாள்.

கிராவிச் ஆவலுடன் அந்தக் காட்சியைக் கண்டு ரசித்துக் கொண்டிருந்தான். தந்தையின் முகமே அவனுடைய நல்லியல்புகளுக்கு எடுத்துக்காட்டாக விளங்கிக் கொண்டிருந்தது. அதைக் கண்டு கிராவிச்சுக்குத் திருப்தி. அவனிடம் சென்று தனக்கு உதவி புரியுமாறு கோரலாமா என்று எண்ணினான். அதற்குள் யாரோ வெளிக் கதவைப் படபடவென்று தட்டினார்கள்.

குடியானவன் இடுக்கு வழியாக வெளியே எட்டிப் பார்த்தான். திரும்பியவனின் முகம் பேய் அறைந்தாற்போல் வெளிறிப் போய் இருந்தது.

வாசற்கதவு மீண்டும் தட்டப்பட்டது. அதோடு உரக்கக் குரல் கொடுத்து, கதவைத் திறக்குமாறு உத்தரவிடும் ஒலியும் கேட்டது. கூடவே நாய் குரைக்கும் சத்தம்வேறு வந்தது.

இமேக்லிஸ் பேக்லீவான் என்பவன் அந்தப் பிராந்தியத்திலேயே மிகக் கொடியவன் என்று பெயர் வாங்கியிருந்தான். அவனிடம் மக்கள் பல அல்லல்கள் பட்டு, 'இனி பட முடியாது துயரம்' என்ற நிலையை அடைந்திருந்தனர். இப்பொழுதுதான், பதினைந்து நாட்களுக்கு முந்தி இவானேவோ கிராமத்தில் குஞ்சோதாலியாவின் குடும்பத்தையே படுகொலை புரிந்து பூண்டோடு அழித்திருந்தான். இரண்டொரு நாட்களுக்கு முன்பு, அந்தக் குடும்பத்திலிருந்து, அவன் கண்களில் படாமல் இந்தக் கிராமத்துக்குக் கொண்டு வரப்பட்டிருந்த ஒரு பச்சிளம் குழந்தையின் தலையைக் கொய்து தன் குரூரத்தைக் காட்டியிருந்தான்.

சிறிது நேரம் நின்று குடியானவன் ஏதோ யோசித்தான். என்ன செய்வது என்று ஒன்றும் விளங்காமல் போகவே, இரு கைகளாலும் தன் தலையை இறுகப் பற்றிக் கொண்டான். சட்டென்று என்ன தோன்றிற்றோ, தனது கோடரியை எடுத்துத் தானியக் குவியலுக்குப் பின்னால் மறைத்து வைத்தான். அங்குதான் கிராவிச் ஒண்டி நின்று கொண்டிருந்தான். பிறகு மரீகாவைக் கம்பளியால் நன்கு போர்த்தினான். பின்பு கதவைத் திறந்தான்.

ஆயுதம் தாங்கிய இரு துருக்கியர்கள் உள்ளே நுழைந்தார்கள். துப்பாக்கிகளைத் தோள்களில் சாய்த்தவண்ணம் அவர்கள் உள்ளே நுழைந்த காட்சியே கதியைக் கலக்கியது. அவர்களில் கொலைக் கண் படைத்தவனுகத் தோன்றியவன்தான் இமேக்லிஸ் பேக்லீவான். உள்ளே நுழைந்ததுமே அவன் தனது குரூரப் பார்வையை அறை முழுவதும் படரவிட்டான். இன்னொருவன் உருண்டு திரண்டு பருத்துக் காட்சியளித்தான் என்றாலும் நொண்டி. அவன் முகத்திலும் கொடூரம் தாண்டவமாடியது. அவன் வேட்டை நாய் ஒன்றைக் கையில் பிடித்திருந்தான். உள்ளே நுழைந்ததுமே அவன் முதல் காரியமாகக் கதவைச் சாத்தித் தாளிட்டான்.

இமேக்லிஸ் பேக்லீவான் கோபமும் கொப்புளிக்கும் பார்வையில் குடியானவனைப் பார்த்தான். "தட்டியதும் நீ ஏன் கதவைத் திறக்கவில்லை?" என்று கேட்டான். குடியானவன் தரை வரையில் குனிந்து தடுமாறும் குரலில் சாக்குப் போக்குத் தேடினான். பதற்றமும் பயமும் ஒருங்கே தாண்டவமாட ஒரு முறை அவன் மரீகாவின் பக்கம் பார்வையை ஓட்டினான்.



Born: 25 - 3 - 1925
Died: 29 - 8 - 1972

In fond and affectionate memory of

Mrs. RENGAMONY

Beloved wife of S. Padmanabhan
Affectionate mother of Jana & Kanna

# பண்டைய நாகரீகத்தின் மறுமலர்ச்சி

'காக்ரா' மற்றும் 'துப்பட்டா'க்களின் பரம்பரை நாகரீக கவர்ச்சிக்கு புதிய எழிலூட்டுகின்றன மபத்லாலின் 'மொஃப்ரின்' உடுப்புத் துணிகள். பாலியெஸ்டர் மற்றும் காட்டன் இழைகலந்த 'மொஃப்ரின்' பண்டைய கற்பனைகளுக்கு, நவநாகரீக ஒயிலோடு கூடிய வண்ணம், வடிவம் மற்றும் டிசைனில் நேர்த்தியை இழைத்து, கிளர்ச்சியூட்டும் மறுமலர்ச்சியை அளிக்கிறது!

**மபத்லால்**
**ஸ்வரூப்** அளிக்கும்
நேர்த்தியான துணிமணிகள்



**மொஃப்ரின்**
பாலியெஸ்டர் சேலைகள் மற்றும்
உடுப்புத் துணிகள்

''இங்கு நீ தனியாகத்தான் இருக்கிறாயா?'' என்று இமேக்னிஸ் பேக்லீவான் மீண்டும் தன் கேள்வியைத் தொடுத்தான்.

''ஆம்!'' கேட்ட சூட்டோடு பதில் சொன்னான் குடியானவன். பொய் பேசுவதனால் பயன் ஏதும் இராது என்று தோன்றவே, ''என் மகள் அதோ படுத்து உறங்குகிறாள்!'' என்று முடித்தான்.

அதே சமயம் அரைகுறைத் தூக்கத்தில் மரீகா போர்வையை முகத்திலிருந்து அகற்றி ஒரு முறை அவர்களைப் பார்த்து மீண்டும் கண் அயர்ந்தாள். விளக்கின் மஞ்சள் ஒளி அவளது சிவந்த கழுத்துப்புறத்தோடு விளையாடியது. இரு துருக்கியர்களும் ஆசை தவழும் கண்களோடு மரீகாவைப் பார்த்தார்கள். இமேக்னிஸ் முகத்தில் மென்மையைப் படர விட்டுக் குடியானவனைப் பார்த்துக் கூறினான்:

''பயப்படாதே, ஐயா ! ஒன்றும் விழுங்கி விட மாட்டோம். போய் எங்களுக்கு ஒரு பாட்டில் 'ரகியா'ச் சாராயம் வாங்கி வா!''

''பேக்லீவான் அண்ணே ! நள்ளிரவு நேரம் ஆயிற்றே ! இந்தப் பிராந்தியத்துக் கடைகள் எல்லாமே மூடியிருக்குமே!'' என்றான் குடியானவன். இந்தக் கொலைகாரர்களுக்கு மத்தியில் மரீகாவை எப்படித் தனியாக விட்டுப் போவது ? — நினைத்தாலே நடுக்கம் எடுத்தது அவனுக்கு.

நொண்டித் துருக்கியன் இடைமறித்து, ''போ, போ! எங்களுக்காக ஏதாவது கடை திறந்திருக்கும்! எங்களுக்குப் பிடித்த வகையில் நீ விருந்து வைத்தால்தான், நம் தொடர்பு நல்லபடியாக இருக்கும்!'' என்றான்.

இமேக்னிஸின் பார்வை பெண் மீதே பதிந்திருந்தது. உறக்கம் கலைந்தும் அவள் அலட்சியமாகப் படுத்திருந்தாள். இவர்களை லட்சியம் செய்பவளாகத் தோன்றவில்லை. குடியானவன் இன்னும் அங்கேயே நின்று கொண்டிருப்பதைக் கண்டதும், இமேக்னிஸுக்குப் பற்றிக்கொண்டு வந்தது. இருந்தாலும் செயற்கையாக வினயத்தை வருவித்துக் கொண்டு, ''மாஷால்லாஹ்! உன் மகள் கொள்ளை அழகு ! அவள் அதிர்ஷ்டம், இன்று நாங்கள் வந்திருக்கிறோம். எங்களை உபசரித்து மகிழ்விப்பதற்கு அவள் என்ன பாக்கியம் செய்தாளோ ? போ ! போய் 'ரகியா' வாங்கி வா ! நாங்கள் உன் நீர் இறைக்கும் இயந்திரத்தைக் கவனித்துக் கொள்கிறோம்!'' என்றான். ஆனால் அடுத்த கணமே கடுமையை வரவழைத்துக் கொண்டு, ''இமேக்னிஸ் பேக்லீவானைத் தெரியும், அல்லவா உனக்கு?'' என்று தன் கேள்வியாலேயே ஒரு சொடுக்குச் சொடுக்கினான்.

குடியானவன் அந்தக் கணமே வரக் கூடிய விபத்தைப் புரிந்து கொண்டுவிட்டான். அவனது சூதுவாதற்ற நன்னெஞ்சு கோபத்தால் குமுறியது. இருந்தாலும் அவன் அந்த நேரத்துக்கு பேக்லீவானின் வலையில் வகையாக அல்லவா மாட்டிக் கொண்டிருந்தான் ! ஆயுதம் தாங்கிய இரண்டு குண்டர்களை அவன் ஒருவனாக எப்படிச் சமாளிக்க

★★★★★

''டேய்! நில்லுடா. கையிலே அந்தப் பெட்டியிலே என்ன இருக்கு சொல்லு ?''

''யார் கண்டாங்க? திறந்து பார்க்கும் வரையில் எவன் காத்திருக்கான்? அதுக்குள்ளேயே தான் பிடுத்து விடறீங்களே !''

★★★★★



முடியும்? அவர்களோடு பொருதுவது பைத்தியக்காரத்தனமாக முடியும். பயன் ஏதும் ஏற்படாது. அவன் அப்பொழுது சாவுக்காகப் பயப்படவில்லை. அவன் சண்டையிட்டுச் சாவதானால் அவன் மகள் தப்பிவிட முடியுமா?

எனவே, எதிரிகளின் உள்ளத்தில் இரக்கத்தை வருவிக்கும் நோக்கத்துடன், ''இத்தனை இரவுக்குப் பின் நான் எனது இந்த நீர் இயந்திரத்தை விட்டு எங்கும் போனதில்லை. என்னை விரட்டாதே! என்னை இங்கேயே இருக்கவிடு!'' என்று வேண்டினான் குடியானவன்.

இரண்டு துருக்கியர்களும் அது வரையில் காட்டி வந்த செயற்கை இரக்கம் இருந்த இடம் தெரியாமல் பறந்தது. அவர்களுடைய கொடிய பார்வை குடியானவனைத் துளைத்து விடும்போல் ஊடுருவியது.

''நன்றிகெட்ட நாயே ! பல்லையா காட்டுகிறாய்? என்ன செய்கிறேன், பார், உன்னை!'' என்று வேட்டை நாயாக உறுமினான் இமேக்னிஸ். அவன் கண்கள் கோவைப் பழமாகச் சிவந்துவிட்டன.

''என்னைக் கொன்று போட்டாலும் சரி, நான் என் மகளைவிட்டு விட்டு எங்கும் போக மாட்டேன்!'' குடியானவன் கெஞ்சும் குரலில் தான் சொன்னான். ஆனாலும் அவன் குரலில் ஓர் உறுதி தொனித்தது.

இமேக்னிஸ் விரைப்பாக நின்றான்.

''டோபல் ஹஸன்! இந்த நன்றிகெட்ட நாயை வெளியே விரட்டு ! வாலாட்டினால் என் கத்தி இருக்கவே இருக்கிறது. இவனைப் பதம் பார்க்க!'' என்று உறுமினான்.

நொண்டி, குடியானவனை நெருங்கிக் கழுத்தில் கை வைத்து வாசற்புறமாகத் தள்ளினான். பிறகு கால்களால் உதைத்து வெளியேற்ற முயன்றான். குடியானவன் கீழே விழுந்து எழுந்தவன், ''காப்பாற்று! காப்பாற்று !'' என்று கூச்சலிட்டான்.

கூச்சலைக் கேட்டு மரீகா உறக்கம் கலைந்து எழுந்தாள். பயப் பிராந்தியுடன் இங்கும் அங்கும் பார்க்கலானாள். இமேக்னிஸ் கத்தி

## கோடாயுதனுக்குக் கோடி அர்ச்சனை

புது தில்லி இர்வின் சாலையில் உள்ள கணேஷ்ஜி மந்திர் நாள்தோறும் பொலிவு பெற்று வருகிறது. இங்கு உறையும் கணேசப் பெருமானுக்கு வருகிற விநாயக சதுர்த்தியிலிருந்து கோடி அர்ச்சனை தொடங்குகிறார்கள். சஹஸ்ரநாம அர்ச்சனை செய்யப் பதினாயிரம் பக்தர்கள் கிடைத்தால்தானே கோடி அர்ச்சனை பூர்த்தியாகும் என்று நிர்வாகிகள் சற்றே மலைப்பதாகத் தெரிகிறது. மலைக்கத் தேவையில்லை என்பது போல் பிள்ளையாரப்பனின் மெய்யன்பர்கள் பெருமளவில் இப்பணியில் ஈடுபடுவாராக. தங்கள் பெயர், விலாசம், கோத்திரம், நட்சத்திரம் முதலிய விவரங்களுடன் அர்ச்சனை ஒன்றுக்கு ரூ. 12 வீதம் அடியில் காணும் முகவரிக்குப் பொருள் அனுப்பக் கோருகிறோம் : Sri S. R. Iyer, Secretary, Ganeshji Mandir, Irwin Road, New Delhi-1

யைப் பிரிப்பதைக் கண்டதும், அவள் வீறிட்டு அலறித் தந்தையை நோக்கிப் பாய்ந்தாள்.

குடியானவன் தன் மகளை மார்போடு அணைத்துக் கொண்டு இமேக்விலைப் பார்த்து, "என் மேல் இரக்கம் காட்டு!" என்று அழாத குறையாகக் கூறினான்.

இமேக்விலின் சாடை அறிந்து நொண்டி, சீற்றம் கொண்ட சிங்கமெனக் குடியானவன் மேல் பாய்ந்தான். அவனது கையைப் பிடித்து முறுக்கினான்.

உதவிபுரிய அருகில் யாரும் இல்லை என்று அறிந்தும் குடியானவன் குரல் எழுப்பினான்: "எனக்கு உதவி புரியுங்கள்!"

இந்த நேரம் வரை ஊராலிச் அப்படியே சிலையாக நின்று நடப்பது அவ்வளவையும் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்கு உரோமங்கள் குத்திட்டன. உடல் விதிர் விதிர்த்தது. குடியானவன் உதவி கோரிக் கூவுவதைக் கண்ட பொழுதோ இரத்தமே கொதித்தது. இதுகாறும் அவனை ஆட்கொண்டிருந்த தயக்கம், பலவீனம், பயம் எல்லாம் விடைபெற்றன. அவனை அறியாமலே அவனது கைகள் அருகில் கிடந்த கோடரியைப் பற்றின. அவன் தானியக் குவியலின் மறைவிலிருந்து தைரியமாக வெளியே வந்தான். விறைப்பாக இமேக்விலை நோக்கி முன்னேறினான். இமேக்வில் அப்பொழுது அவன் பக்கமாக முதுகைக் காட்டிக் கொண்டு நின்றிருந்தான். ஊராலிச் தன் பலம் கொண்ட மட்டும் கோடரியைத் தூக்கி இமேக்விலின் தலையைக் குறி பார்த்துப் போட்டான்.

குடியானவனைக் கயிற்றினால் கட்டிக் கொண்டிருந்த நொண்டி தற்செயலாக இந்த நிகழ்ச்சியைக் கண்டு விட்டான். குடியானவனை அப்படியே விட்டுவிட்டு ஊராலிச்சை நோக்கிச் சுட்டான். குறி தவறி, அறையில் புகை மண்டியது. விளக்கு அணைந்தது. இருட்டில் ஒரு பெரும் போர் நிகழலாயிற்று.

அணைந்த விளக்கு இரண்டாம் முறையாகப் பொருத்தப்பட்ட பொழுது, நொண்டி பூமியில் விழுந்து, சாவின் இறுதிக் கணத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்தான். ஊராலிச் எப்படியோ அவன் கத்தியைத் தன் வசப்படுத்திக் கொண்டிருந்தான். அந்தக் கத்தியையே அவன் கழுத்தில் இறக்கி விட்டான். இரண்டு துருக்கியர்களுடைய உடல்களும் இரத்தத்தில் தோய்ந்து உருண்டன.

குடியானவன் வியப்பினால் விழிகள் விரியக் ஊராலிச்சை நோக்கினான். 'யார் இவன்? எங்கிருந்து நமக்கு உதவ வந்தான்? புரியவில்லையே!' என்று சிந்தனைவசப்பட்டான்.

ஊராலிச் உயரமும் பருமனும் கொண்ட வலுவான இளைஞன். அவன் முகம் களைப்பு மிகுதியினால் வாடி வெளுத்திருந்தது. அவனது கூரிய கருவிழிகள் உள்ளுக்குள் புதைந்திருந்தன. அவனது அடர்ந்த கேசங்கள் புழுதியைத் தேக்கியிருந்தன. பார்ப்பதற்கு அவன் சிறையிலிருந்து தப்பி ஓடியவனைப் போலவோ அல்லது சிறை செல்பவனைப் போலவோ தோன்றினான். குடியானவன் அவனது கோலத்தைக் கண்டு எடை போட்டது இப்படித்தான். இருந்தாலும் அவனை அநுதாபத்தோடு நோக்கி மென்மையான குரலில் கூறினான் :

"நீ யார்? எங்கிருந்து வந்தாய்? என்பதெல்லாம் எனக்குத் தெரியாது. ஆனால் நீ எனக்குச் செய்த இந்த உதவியை வாழ்நாள் முழுவதும் மறவேன். நீ என்னை மரணத்தின் வாயிலிருந்து காப்பாற்றினாய். அதைக் காட்டிலும் என் மகளின் மானத்தைக் காப்பாற்றினாய். ஆண்டவன் உனக்கு அருள் பாலிப்பானாக. உன்னிடம் மக்கள் அனைவருமே நன்றி பாராட்டுவார்கள். ஏன், தெரியுமா? இதோ செத்துக் கிடக்கிறானே, இவன் பெயர் இமேக்வில். இவன் பெயரைக் கேட்டாலே, அன்னையின் கருவில் வளரும் குழந்தைகூட அச்ச மிகுதியினால் கதறி அழும்! அப்படிப்பட்ட கொடியவனிடமிருந்து இன்று மக்களுக்கு விடுதலை கிடைத்திருக்கிறது. மகனே! திரும்பத் திரும்ப உனக்கு நன்றி கூறுவதைத் தவிர நான் வேறு எதுவும் அறியேன்!"

ஊராலிச் விழிகளில் நீர் பெருக்கெடுத்தவாறே, குடியானவனது இதயத்தின் ஆழத்திலிருந்து வெளிவந்த உணர்ச்சிகளைச் செவிமடுத்தான். பேச்சின் முடிவிலே ஆழ்ந்த பெருமூச்சு ஒன்று விட்டுக் கூறினான்:

"நான் அப்படியொன்றும் பெரிதாக எதுவும் செய்து விடவில்லை. இதுபோன்ற இரண்டே இரண்டு பேரிடமிருந்துதான் நமக்கு இப்பொழுது விடுதலை கிட்டியிருக்கிறது. இதுபோல் ஆயிரக்கணக்கில் கொடுங்கோன்மையாளர்கள் நமது பூமியில் அவிழ்த்து விடப்பட்ட காளைகள் என அலைய வந்து கொண்டிருக்கிறார்கள். அத்தனை கொடியவர்களிடமிருந்தும் விடுதலை பெறும் வரையில் மக்களைச் சுதந்திரம் பெற்றவர்களாகக் கூற முடியாது!"

ஹிந்தியிலிருந்து தமிழில் : ரா. வீழிநாதன்

# சிவகாமியின் சபதம்

## முன்கதைச் சுருக்கம்

தமிழ் கற்கவும் சிற்பக் கலை பயிலவும் காஞ்சி நகர் நோக்கி நடந்தான் பரஞ்சோதி. வழியில் மரத் தடியில் கண்ணயருகையில் அவனை ஒரு நாகம் தீண்ட விருந்தது. அதனிடமிருந்து புத்த பிக்ஷு நாகநந்தி அவனைக் காத்து வழித்துணையாகவும் நடந்தார்.

காஞ்சி கோட்டைக் கதவுகள் யுத்தம் வரக் கூடும் என்பதால் அடைக்கப்பட்டபோதிலும் நாகநந்தியின் குரலைக் கேட்டதும் காவலன் மருதப்பன் வாசலுக்குள் வாசலாக இருந்த ஒரு சிறு கதவைத் திறந்து வழி விட்டான். போர்ச் செய்தியுடன் தூதர்கள் வந்ததாகவும் அதனால் சிவகாமியின் அரங்கேற்றம் தடைப்பட்டதாகவும் அவனிடமிருந்து நாகநந்தியும் பரஞ்சோதியும் அறிந்தனர்.

நாவுக்கரசர் மடத்தைச் சுட்டிக் காட்டிவிட்டுத் தம் வழி நடந்தார் நாகநந்தி. மடத்தைத் தேடிச் சென்ற பரஞ்சோதி மதம் கொண்ட யானை ஒன்று சிவகாமியும் ஆயனரும் பயணப்பட்ட பல்லக்கை நோக்கி வருவதைக் கண்டு வேல் எறிந்தான். தன்னைத் தாக்கியவனை யானை பின்தொடரவே தந்தையும் மகளும் பிழைத்தனர்.

பல்லவ சாம்ராஜ்யத்தின் மகாசிற்பியும் தலைசிறந்த கலைவாணியும் உயிர் தப்பியதை அப்போது அங்கு வந்து சேர்ந்த மகேந்திர பல்லவரும் இளவரசர் மாமல்லரும் அறிந்து அகமகிழ்ந்தனர்.





அமரர் கல்கி

யானை முறித்தெறிந்த பரஞ்சோதியின் வேலைச் சிவகாமியிடமிருந்து பெற்றுக்கொண்ட மாமல்லனின் விரல்கள் சிவகாமியின் விரல்களைத் தீண்டின. இருவரும் படபடப்படைந்தாலும் தங்களைப் பாக்கியசாலிகள் என்றும் கருதினர்.

பின் தூக்கி வந்த யானையிடமிருந்து ஓடித் தப்பிய பரஞ்சோதி இரவில் திக்குத் திசை தெரியாமல் அலைந்தபோது நகரக் காவலர்கள் அவனைச் சந்தேகித்துச் சிறையில் அடைத்தனர். ஆனால் சிறையிலிருந்து அவன் தப்ப உதவும் விதமாக மேலே கூரையில் ஒரு துவாரம் ஏற்பட்டது. அதன் வழியே ஒரு கயிறு இறங்கியது.

பரஞ்சோதி அதைப் பற்றிக்கொண்டு சரசரவென்று மேலே ஏறினான்!

### ஏழாம் அத்தியாயம்

## நிலா முற்றம்

ஆயனரிடமும் சிவகாமியிடமும் விடைபெற்றுக் கொண்ட பிறகு மகேந்திரச் சக்கரவர்த்தியும் மாமல்லரும் குதிரைகளைத் திருப்பி அதிவேகமாய் விட்டுக் கொண்டு போய் அரண்மனையை அடைந்தார்கள். அவர்களைக் கண்டதும் அரண்மனை வாசலில் காவல்புரிந்து கொண்டிருந்த வீரர்கள், ''வாழ்க! வாழ்க! சக்கரவர்த்திப் பெருமான் வாழ்க!'' ''மாமல்ல மகா வீரர் வாழ்க!'' என்று கோஷித்துக் கொண்டு அவர்களுக்கு வணங்கி வழிவிட்டு நின்றார்கள். காவலர்களுடைய வாழ்த்து ஒலியுடன் அங்கே வரிசை வரிசையாக நின்ற குதிரைகளின் கனைப்பு ஒலியும் சேர்ந்தது. அரண்மனை முன் வாசலைத் தாண்டி அவர்கள் உள்ளே நுழைந்



ததும் அங்கேயிருந்த விசாலமான நிலா முற்றத்தில் வீரர்கள் பலர் அணிவகுத்து நிற்பது தெரிந்தது. சக்கரவர்த்தியையும் குமார பல்லவரையும் கண்டதும் அந்த வீரர்களும் ஜய கோஷம் செய்தார்கள். எல்லோருக்கும் முன்னால் நின்ற ஒருவர் மட்டும் தனியே பிரிந்து முன்னால் வந்து பணிவுடன் நிற்க சக்கரவர்த்தி அவரைப் பார்த்து, ''சேனாபதி! தூதர்களுக்கு எல்லா விஷயமும் சொல்லியாகி விட்டதா? புறப்படுவதற்கு ஆயத்தமா யிருக்கிறார்களா?'' என்று கேட்டார்.

''ஆம் பிரபு! எல்லோருக்கும் சொல்லியாகிவிட்டது. அவரவர்களும் இன்னின்ன திக்குக்குச் செல்ல வேண்டுமென்று தெரிவித்து விட்டேன். எல்லாரும் கிளம்ப ஆயத்தமாய்த் தங்களுடைய கட்டளைக்காகக் காத்திருக்கிறார்கள்'' என்று சேனாபதி கூறினார்.

சக்கரவர்த்தி நரசிம்ம வர்மரைப் பார்த்து, ''குழந்தாய்! உன் தாயார் கவலையுடன் இருப்பாள். அவளிடம் சென்று விஷயம் இன்னதென்று தெரியப்படுத்து. இருவரும் போஜனத்தை முடித்துக் கொண்டு மேல் மாடத்துக்குச் செல்லுங்கள். இந்தத் தூதர்களை அனுப்பிவிட்டு நானும் அங்கு வந்து சேருகிறேன்'' என்றார்.

வெகு காலம் சமணராயிருந்த காரணத்தினால் சக்கரவர்த்தி இரவில் போஜனம் செய்வதில்லை. சைவரான பிறகும் அவர் இரவில் உணவு அருந்தும் வழக்கத்தை மேற்கொள்ளவில்லை.

''ஆகட்டும் அப்பா! இதோ போகிறேன். ஆனால் எல்லாப் படைகளும் வந்து சேரும் வரையில் காத்திருக்க வேண்டுமா? ஆயத்தமா யிருக்கும் படைகள் உடனே போருக்குப் புறப்படலாமல்லவா?''



சக்கரவர்த்தி புன்னகையுடன் "அதைப் பற்றி யோசிக்கலாம். குழந்தாய்! நீ இப்போது உன் தாயாரைப் போய்ப் பார்!" என்ருர்.

மாமல்லர் போன பிறகு மகேந்திரர் சேனுபதியைப் பார்த்து "கலிப்பகையாரே! தூதுவர்களிடம் சொல்லி அனுப்ப வேண்டிய செய்தி இது: தொண்டை மண்டலத்திலும் சோழ மண்டலத்திலும் உள்ள ஒவ்வொரு கோட்டத்திலும் ஆயிரம் வீரர் அடங்கிய படைகளைத் திரட்டி ஆயத்தமாய் வைத்திருக்க வேண்டியது. மறுபடியும் செய்தி அனுப்பியவுடனே படை புறப்படச் சித்தமாயிருக்க வேண்டும் நான் சொல்வது தெரிகிறதா?" என்ருர்.

"தெரிகிறது, பிரபு!"

"கோட்டையைப் பத்திரப்படுத்துவதற்கு வேண்டிய ஏற்பாடு எல்லாம் செய்தாகி விட்டதல்லவா?"



"துறவறத்தாரைத் தவிர வேறு யாரையும் விசாரியாமல் கோட்டைக்குள் விடக்கூடாதென்று கட்டளையிட்டிருக்கிறேன். வெளியே போகிறவர்களையும் கவனிக்கச் சொல்லியிருக்கிறேன். நகருக்குள்ளேயும் யார் பேரிலாவது சந்தேகத்துக்கு இடமிருந்தால் சிறைப்படுத்திக் காவலில் வைக்கச் சொல்லியிருக்கிறேன்."

"கோட்டைச் சுவரெல்லாம் பழுது பார்த்திருக்கிறதா? சேனுபதி! பல்லவ சாம்ராஜ்யம் நிலைத்து நிற்பது இந்தக் காஞ்சிக் கோட்டையின் பாதுகாப்பையே பொறுத்திருக்கலாம்."

"பல்லவ சாம்ராஜ்யத்தைப் பாதுகாப்பதற்குக் காவேரி முதல் கிருஷ்ணா நதி வரையில் லட்சோப லட்சம் வீரர்கள் காத்திருக்கிருர்கள், பிரபு!"

"உண்மைதான்; ஆனுல், அவர்கள் வெறுங் கையினுல் சண்டை போட முடியாதல்லவா? அந்த லட்சோப லட்சம் வீரர்களுக்கும் வேண்டிய வேல்களும் வாள்களும் எங்கே?" என்ருர் சக்கரவர்த்தி.

சேனுபதி கலிப்பகையார் மௌனம் சாதித்தார்.

"இளைச் சோழ நாட்டில் வாளும் வேலும் நன்ருய்ச் செய்வார்கள்போல் இருக்கிறது. யானை மேல் எறியப்பட்ட வேலை நீர் பார்த்தீரா?"

"இல்லை, பிரபு!"

"மாமல்லனிடம் அது இருக்கிறது. 'மாமாத்திரர்' என்று எழுதியிருக்கிறது. 'மாமாத்திரர்' என்ற பட்டம் இளைச் சோழ நாட்டுக்கு உரியதல்லவா!"

"ஆம், பல்லவேந்திரா!"

"அந்த வேலை எறிந்தவன் இளைச் சோழ நாட்டானுய்த்தானிருக்க வேண்டும். அம்மாதிரி வேல் எறியக்கூடிய வீரர்கள் ஆயிரம் பேர் இருந்தால் இந்தக் கோட்டைக் காவலைப் பற்றிக் கவலையில்லை!"

"பல்லவ சைனியத்தில் எத்தனையோ ஆயிரம் வேல் வீரர்கள் இருக்கிருர்கள், பிரபு!"

"அந்த வேலை எறிந்தவன் பதினயிரத்தில் ஒரு வீரன்! அவனை அவசியம் கண்டுபிடிக்க வேண்டும்."

சேனுபதி மௌனமாயிருந்தார்.

"இன்னும் ஒரு விஷயம்: காவித் துணி அணிந்தவர்களைப் பற்றிய கட்டளையை மாற்ற வேண்டும். ஆயனரையும் அவர் மகளையும் பார்த்துவிட்டு நாங்கள் திரும்பிய போது ஒரு சந்தின் முனையில் ஒரு புத்த பிக்ஷு நிற்பதைப் பார்த்தேன். சட்டென்று அவர், நிழலில் மறைந்து கொண்டார்."

"கட்டளை என்ன பிரபு?"

"இராஜ விஹாரத்தின் மேல் கவனம் வைத்து, புதிதாக வந்திருக்கும் புத்த பிக்ஷு யார் என்று பார்க்க வேண்டும்."

"உடனே ஏற்பாடு செய்கிறேன்."

பிறகு சேனுபதி கலிப்பகையார் ஒவ்வொரு தூதராக அழைத்து இவரிவர் இன்னின்ன கோட்டத்துக்குப் போகிருர் என்று சக்கரவர்த்தியிடம் தெரியப்படுத்தினுர். தூதர்கள் தனித்தனியே சக்கரவர்த்திக்கு வணங்கி, விடை பெற்றுக் கொண்டு தத்தம் குதிரை மீதேறி விரைந்து சென்ருர்கள்.

அம்மா
அவங்க பாத்ரூம்
ஏன் அவ்வளவு
நாற்றமடிக்குது
நம்முடையது
எவ்வளவு
வாசனையா
யிருக்கு?

கண்ணு, நாம்
ஓடோனில்
உபயோகிக்கிறோம்




ஓடோனில் துர்நாற்றங்களை உடனடியாக அழிக்கிறது. பாத்ரூம் போன்ற இடங்களைத் தூய்மையாகவும் நறுமணத்துடனும் வைக்கிறது.

ஓடோனில் பல்வேறு நறுமணங்களில் கிடைக்கின்றன. ஓடோனில் வகைவகையான அளவுகளில், தினுசுகளில், டப்பாக்களில் கிடைக்கின்றன.

**பல்சாரா**
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்
BALSARA பல்சாராக் கம்பெனி (பிரை.) லிட்.

CHAITRA-BLS-7 TAM

# உங்கள் எல்லாத் தலைவலிகளையும்



# போக்குகிறது ஒரே ஒரு ஸாரிடான்

ட்ரேட் மார்க் 'ரோஷ்'

உங்களுக்கு இதமளித்து உற்சாகப் படுத்தியவாறே தலைவலிகளிலிருந்து நிவாரணமளிக்கும் சக்தி அடங்கி இருப்பது ஸாரிடானில் மட்டுமே.

ஸாரிடானின் விசேட ஃபார்முலா தலைவலியின் மூலகாரணமாக இருக்கும் இடத்தில் செயல்புரிந்து உடனடியாக நிவாரணமளிக்கிறது. ஒன்றே ஒன்று போதும். அதுவே ரோஷின் சர்வதேச ஆராய்ச்சியின் விளைவாகும்.

தவிர, பல்வலி, உடம்புவலி மற்றும் அயர்ச்சியினால் ஏற்படும் பலவித அசதிகளையும், வலிகளையும் போக்கும் ஆற்றல் ஒரே ஒரு ஸாரிடானில் உள்ளது.

ஸாரிடான் மட்டுமே
நிவாரணமளிக்கிறது.
சோர்வை நீக்குகிறது.
புத்துயிரூட்டுகிறது.







தரமான ஒரு ரோஷ் தயாரிப்பு

RP 5960

### எட்டாம் அத்தியாயம்

# புவன மகாதேவி

**மா**மல்லர் தந்தையின் சொற்படி அரண்மனை நிலா முற்றத்தைக் கடந்து சென்று, உள் வாசலை நெருங்கியதும் குதிரை மீதிருந்து இறங்கினார். அங்கே சித்தமாய்க் காத்திருந்த பணியாட்கள் குதிரையைப் பிடித்து அப்பாலே கொண்டு சென்றார்கள்.

பிறகு, மாமல்லர் விசாலமான அந்த அழகிய அரண்மனைக்குள் பிரவேசித்துத் தீபம் ஏந்துவோர் தம்மைப் பின்தொடர்ந்து வருவதற்குத் திணறும்படியாக, அவ்வளவு விரைவாக நடந்து சென்றார்.

புதிதாக அந்த அரண்மனைக்குள் பிரவேசிக்கிறவர்கள் அங்கே குறுக்கும் நெடுக்குமாகச் சென்ற நடைபாதைகளில் வழி கண்டுபிடித்துச் செல்வது அசாத்தியமாயிருக்கும். நரசிம்மர் அந்தப் பாதையின் வழியாக வளைந்து வளைந்து சென்று அரண்மனை அந்தப்புரத்தை அடைந்தார். அங்கே சிற்ப வேலைகளினால் சிறப்படைந்த ஒரு வாசலை அவர் அணுகியதும், ''குழந்தாய்! வந்தாயா?'' என்று உள்ளேயிருந்து ஒரு குரல் கேட்டது.



பல்லவ சாம்ராஜ்யத்தின் பட்டத்தரசியான புவன மகாதேவி அந்தப்புர வாசற்படியில் வந்து நின்றார். அவருடைய கம்பீரமான தோற்றமும் முதிர்ந்த சௌந்தரிய வதனமும், ''திரிபுவன சக்கரவர்த்தினி'' என்று பல்லவ சாம்ராஜ்யத்தின் பிரஜைகள் அவரைக் கொண்டாடுவது முற்றும் பொருந்தும் என்று தெரியப்படுத்தின.

''அம்மா!'' என்ற குரலுடன் அருகில் வந்த குமாரனைச் சக்கரவர்த்தினி இரு கைகளாலும் அணைத்துக் கொண்டு. ''குழந்தாய்! இன்றைக்கு...'' என்று ஏதோ சொல்லத் தொடங்குவதற்குள் மாமல்லர் ''அம்மா! உங்களை ரொம்பவும் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். ஒரு வரம் தர வேண்டும்!'' என்றார்.

புவன மகாதேவியின் முகத்தில் புன்னகை அரும்பியது.

''வரமா? நல்லது. கேள்! தருகிறேன். அதற்குப் பிரதியாக நானும் ஒரு வரம் கேட்பேன். அதை நீ தரவேண்டும்!'' என்று அன்பு கனிந்த குரலில் கூறினார்.

மாமல்லர் ''பிள்ளை அன்னையிடம் வரம் கேட்பது நியாயம். பிள்ளையிடம் தாய் வரம் கேட்பது எங்கேயாவது உண்டா? முடியவே முடியாது!'' என்றதும் புவன மகாதேவியின் முகத்தில் புன்னகை மறைந்தது.

இருவரும் உள்ளே சென்றார்கள்.

நரசிம்மர் தமது தலை அணியையும் ஆபரணங்களையும் எடுத்து வைத்து விட்டுக் கால் கை சுத்தம் செய்து கொண்டு வந்தார். பிறகு இருவரும் அந்தப்புர பூஜா மண்டபத்துக்குள் பிரவேசித்தார்கள். அங்கே மத்தியில் நடராஜ மூர்த்தியின் திருவுருவம் திவ்ய அலங்காரங்களுடன் விளங்கியது. பின்புறச் சுவர்களில் சிவபெருமானுடைய பல வடிவங்களும் பாலகோபாலனுடைய லீலைகளும் விதவிதமான வர்ணங்களில் அழகாகச் சித்திரிக்கப்பட்டிருந்தன.

பூஜையெல்லாம் முன்னமே முடிந்திருந்தபடியால், தாயும் மகனும் அந்தத் திருவுருவத்தை வழிபட்டு விட்டு வெளியே வந்து போஜன மண்டபத்துக்குள் பிரவேசித்தார்கள்.

உணவருந்த உட்கார்ந்ததும் புவன மகாதேவி ''குழந்தாய்! ஏதோ முக்கியமான செய்தி வந்திருக்கிறதாம்; கோட்டை வாசல் எல்லாம் சாத்தியாகிவிட்டதாம். அரண்மனையெல்லாம் அல்லோல கல்லோலப்படுகிறது: எனக்கு மட்டும் ஒன்றுமே தெரியவில்லை. நீயாவது சொல்லக் கூடாதா? பெண்கள் என்றால் மட்டமானவர்கள், அவர்களுக்கு ஒன்றுமே தெரிய வேண்டியதில்லை என்பதாக நீகூடவா எண்ணம் வைத்திருக்கிறாய்?'' என்றார்.

மாமல்லர் உணவு பரிமாறிக்கொண்டிருந்த பணியாட்களைப் பார்த்துவிட்டு, ''அம்மா! சாப்பிட்டானதும் மேல்

மாடத்துக்குப் போய் எல்லா விவரங்களும் சொல்கிறேன். ஆனால் ஒன்று மட்டும் இப்போதே கேட்டுக்கொள்கிறேன்: இனிமேல் தினந்தோறும் நான் வந்த பிறகுதான் தாங்கள் இராப் போஜனம் செய்வது என்று வைத்துக் கொள்ளக் கூடாது. அந்த வழக்கத்தை இன்றோடு நிறுத்திவிட வேண்டும்'' என்றார்.

சக்கரவர்த்தினி குமாரரை அன்பு ததும்பிய கண்களால் பார்த்துப் புன்னகை புரிந்தார். ஆனால் மறுமொழி ஒன்றும் சொல்லவில்லை.

* * *

காஞ்சி அரண்மனையில் பகல் போஜனம் ராஜரீக சம்பிரதாயங்களுடன் ஆடம்பரமாய் நடப்பது வழக்கம். பெரிய சாம்ராஜ்ய உத்தியோகஸ்தர்கள் அந்நிய நாடுகளிலிருந்து வந்த பிரமுகர்கள் சிவனடியார்கள் வைஷ்ணவப் பெரியார்கள் பிரசித்தி பெற்ற கலைஞர்கள் தமிழ்க்கவிஞர்கள் வடமொழிப் பண்டிதர்கள் முதலியோர் விருந்தாளிகளாக அழைக்கப் படுவது உண்டு.



எனவே பகல் போஜன நேரத்தில் அரண்மனை வாசிகள் ஒருவரோடொருவர் அளவளாவுதல் இயலாத காரியம்.

மற்றும் பகல் நேரமெல்லாம் சக்கரவர்த்தியும் குமாரரும் ராஜரீக காரியங்களில் ஈடுபட்டிருப்பார்கள்.

எனவே தாயும் பிள்ளையும் சந்திப்பதற்கு இராப் போஜன நேரத்தைச் சக்கரவர்த்தி திட்டம் செய்திருந்தார்.

அதற்குப் பிறகு அரண்மனை மேல் உப்பரிகையின் நிலா மாடத்தில் அவர்கள் மூன்று பேரும் சந்தித்துப் பேசுவது வழக்கமா யிருந்தது.

இன்றைக்குச் சாப்பாடு ஆனதும் தாயும் புதல்வரும் மேல் உப்பரிகைக்குச் சென்று நிலா மாடத்தில் அமைத்திருந்த பளிங்குக்கல் மேடையில் அமர்ந்தார்கள்.

பால் நிலவில் மூழ்கியிருந்த காஞ்சி நகரமானது அன்றிரவு என்றுமில்லாத அமைதி பெற்று விளங்கிற்று.

நரசிம்ம வர்மருடைய மனம் அந்நகரின் கீழ்க் கோட்டை வாசலுக்குச் சென்றது. இப்போது அந்தக் கோட்டை வாசலைக் கடந்து ஒரு சிவிகை போய்க் கொண்டிருக்கும். அந்தச் சிவிகையில் ஆயனரும் அவர் மகளும் அமர்ந்திருப்பார்கள்.

ஆகா! அவர்களுக்குத்தான் இன்றைக்கு எப்பேர்ப்பட்ட ஆபத்து வந்தது! மதயானையின் மீது வேல் எறிந்து அவர்களைக் காப்பாற்றிய வீரன் யாராக இருப்பான்?

புதல்வர் தாமே பேசுவார் என்று புவன மகாதேவி சிறிது நேரம் காத்திருந்தார். அவர் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து விட்டார் என்பதைத் தெரிந்து கொண்டு ''குழந்தாய்!'' என்றார்.

உடனே மாமல்லர் திடீரென்று கனவு கலைந்தவர் போல் திடுக்கிட்டுத் தாயாரைப் பார்த்தார்.

''அம்மா! அம்மா! நான் உங்களிடம் விரும்பிய வரத்தைக் கேட்டே விடுகிறேன். உங்களுக்குப் புண்ணியமாகப் போகட்டும். என்னைக் 'குழந்தாய்' என்று கூப்பிடாதீர்கள். நான் இன்னும் பச்சைக் குழந்தையா? பல்லவ இராஜ்யத்தில் உள்ள புகழ் வாய்ந்த மல்லர்களையெல்லாம் ஜயித்து 'மாமல்லன்' என்று பட்டம் பெற்றபிறகும் என்னைக் 'குழந்தை!' 'குழந்தை' என்றால் நான் என்ன செய்கிறது? அப்பாவோ இன்னும் என்னைத் தொட்டிலில் கிடக்கும் குழந்தையாகவே எண்ணி நடத்துகிறார்! உங்கள் இரண்டு பேருக்கும் இடையில் நான் அகப்பட்டுக்கொண்டு...''

''அதற்கு என்ன செய்யலாம்? பெற்றோர்களுக்கு மகன் எப்போதும் குழந்தைதான்'' என்ற குரலைக் கேட்டுத் தாயும் மகனும் திரும்பிப் பார்த்தார்கள். அவர்களுக்குத் தெரியாமல் மகேந்திரச் சக்கரவர்த்தி பின்னால் வந்து நிற்பதைத் தெரிந்து கொண்டு இருவரும் பயபக்தியுடன் எழுந்து நின்றார்கள்.

மகேந்திரர் பளிங்கு மேடையில் அமர்ந்ததும் புவன மகா தேவியும்

மாமல்லரும் உட்கார்ந்தார்கள். ''தேவி! குழந்தை ஏதாவது சொன்னுனா?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

''இன்னும் ஒன்றும் சொல்லவில்லை. என் பேரிலும் உங்கள் பேரிலும் குறை தான் சொல்லிக் கொண்டிருந்தான்!''

''குறை சொல்லாமல் வேறு என்ன சொல்லட்டும், அப்பா? பல்லவ ராஜ்யத்தில் அந்நியர் பிரவேசித்த செய்தி கிடைத்த பிறகும் நாம் வெறுமனைக் கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருப்பதா? சேனாபதி கலிப்பகையார் சேனை திரட்டுவதற்குள் கலியுகமே முடிந்து விடும் போலிருக்கிறதே? இத்தனை நேரம் நமது சைனியம் போருக்குக் கிளம்பி யிருக்க வேண்டாமா?'' என்று கொதித்தார் மாமல்லர்.

''பல்லவ ராஜ்யத்தில் அந்நியர் பிரவேசித்தார்களா? இது என்ன?'' என்று புவன மகாதேவி வியப்பும் அவநம்பிக்கையும் தொனித்த குரலில் கேட்டார்.

''ஆம், தேவி! அற்ப சொற்பமாகப் பிரவேசிக்க வில்லை. பெரும் படைகளுடனே திடீரெனப் பிரவேசித்திருக்கிறார்கள்...''

''பல்லவேந்திரா! மந்திராலோசனை சபையில் நான்மட்டும் வாயைத் திறக்காமல் இருக்க வேண்டும் என்று ஏன் கட்டளை யிட்டிருக்கிறீர்கள்? எல்லாரும் ஏதோ பேசியபோது என் மனம் கொதித்த கொதிப்பை மிகவும் முயன்று அடக்கிக் கொண்டிருந்தேன்....''

மாமல்லரின் பேச்சை மறுத்துச் சக்கரவர்த்தி தமது பட்டமகிஷியைப் பார்த்துச் சொன்னார்: ''தேவி! நரசிம்மன் இன்னும் குழந்தையாகத்தான் இருக்கிறான். வந்திருக்கும் யுத்தம் எப்பேர்ப்பட்ட தென்பதை அவன் அறியவில்லை. இரண்டு பேரும் கேளுங்கள்: வாதாபி மன்னன் புலிகேசி பெரும் படைகளுடன் துங்கபத்திரை நதியைக் கடந்து நமது ராஜ்யத்துக்குள் பிரவேசித்திருக்கிறான். அவனுடைய சைனியத்தில் லட்சக் கணக்கான வீரர்கள் இருக்கிறார்கள். ஆயிரக் கணக்கில் யானைகள் இருக்கின்றனவாம். பெரிய காளைகள் பூட்டிய நூற்றுக் கணக்கான வண்டிகள் தொடர்ந்து வருகின்றனவாம். பதினாயிரக் கணக்கான குதிரை வீரர்கள் வருகிறார்களாம். வெகு காலமாகவே புலிகேசி இந்த யுத்த ஏற்பாடுகளைச் செய்து வந்திருக்கிறான். நம் ஒற்றர்கள் எப்படியோ ஏமாந்து போயிருக்கிறார்கள். நமது எல்லைக் காவல் படைகளைப் புலிகேசியின் ராட்சத சைனியம் வெகு சீக்கிரத்தில் முறியடித்து விட்டு அதிவேகமாக முன்னேறி வருகிறதாம். அந்தச் சைனியத்தைத் தடுத்து நிறுத்துவதற்கு வேண்டிய படை பலம் தற்போது நம்மிடம் இல்லை. ஆங்காங்குள்ள நம் படைகள் பின்வாங்கி வந்து கொண்டிருக்கின்றன. பல்லவ ராஜ்யத்துக்கு வந்திருக்கும் அபாயம் மிகப் பெரியது. ஆனாலும், நெற்றிக் கண்ணைத் திறந்து திரிபுரத்தை எரித்த பினாகபாணியின் அருளினால் முடிவில் நமக்குத்தான் வெற்றி கிடைக்கப் போகிறது. அதைப் பற்றிச் சந்தேகம் வேண்டியதில்லை!''

தந்தை பேசி முடிக்கும் வரையில் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்த நரசிம்மர், ''அப்பா! பல்லவ சைனியம் பின்வாங்கி வருகிறதா? இது என்ன அவமானம்? இப்போது எனக்கு அனுமதி கொடுங்கள், அப்பா! நம்மிடம் தற்சமயம் ஆயத்தமாயிருக்கும் படைகளை அழைத்துக் கொண்டு புறப்படுகிறேன்!'' என்றார்.

''பொறு நரசிம்மா, பொறு! பல்லவ சைனியத்தை நீ நடத்திச் செல்லும்படியான காலம் வரும். அதுவரையில் பொறுமையுடன் நான் சொல்வதைக் கேட்டு நட. இன்றிரவு ஒரு முக்கியமான வேலை இருக்கிறது. என்னுடன் வருகிறாயா?''

''கேட்க வேண்டுமா? வருகிறேன், அப்பா.''

''தேவி! நரசிம்மனை இன்று முதல் நான் 'குழந்தை'யாக நடத்தப் போவதில்லை. சகாவாகவே நடத்தப் போகிறேன். மந்திராலோசனைகளில் கலந்து கொள்ளும் உரிமையையும் இன்றுமுதல் அவனுக்கு அளிக்கிறேன். நீயும் இனிமேல் அவனைக் 'குழந்தை' என்று அழைக்க வேண்டாம்!'' என்றார் சக்கரவர்த்தி.

புவன மகாதேவியைப் படுப்பதற்குப் போகச் சொல்லிவிட்டுத் தந்தையும் மகனும் அரண்மனையிலிருந்து வெளியேறிச் சென்றார்கள். (தொடரு

**ரேகா** அனந்த் பாய் • ராம் வாரியர்








# இன்ஸ்பெக்டர் விக்ரம்

-அஜித் குர்தி

படம்: பிரதாப் முல்லிக்

4





























# சிந்தனைக்கு எட்டாத சிந்தாமணி!

**ப**ணவீக்கப் பிசாசு 'ஆ'வென்று வாயைத் திறந்து கொண்டு என்னை விழுங்கக் காத்திருந்தது! விலைவாசி உயர்வுப் பேய் துவைத்த வேஷ்டியை முறுக்கிப் பிழிவதுபோல் என்னை ஒரு கை பார்க்க ஆவலுடன் இருந்தது!

நான் பயந்து அலறி அடித்துக் கொண்டு ஓடினேன்! ''தாயே! காப்பாற்று அம்மணி! பேய், பிசாசுகள் துரத்துகின்றன'' என்று கதறினேன்.

ஆனால் இந்திரா காந்தி அம்மையாரோ கையைப் பிசைந்து கொண்டு என்ன செய்வது என்று புரியாமல் விழித்தார்!

இம்மாதிரியான சொப்பனங்களைக் கண்டு அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்து உட்காரும்போதெல்லாம் நான் சற்றுத் தள்ளிப் படுத்திருக்கும் என் மக்களைப் பார்த்து விட்டு நினைத்துக் கொள்வேன்: 'அடாடா! நமக்கே வாழ்க்கையை நடத்துவது இவ்வளவு சிரமமாக இருக்கிறதே, நமது மக்கள் வளர்ந்து ஆளாகும்போது நாட்டின் பொருளாதார நிலைமை இன்றுள்ளதைவிட மோசமாக அல்லவா இருக்கும்? இவர்கள் என்ன பாடுபடப் போகிறார்களோ?'

இந்த எண்ணம் அன்றிரவு தூக்கத்தை அடித்து விரட்டிவிடும்! ஆனால் சமீபத்தில் கோவை சென்று சிந்தாமணி கூட்டுறவு சிறப்பங்காடியைப் பார்த்துவிட்டு வந்ததிலிருந்து என் பயம் கணிசமாகக் குறைந்துவிட்டிருக்கிறது.

பண வீக்கம், விலைவாசி உயர்வுப் பேய்களை அடித்து விரட்ட முடியும்; எதிர்காலம் சுபிட்சமுடையதாக விளங்க இயலும் என்ற நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. இதற்கெல்லாம் மார்க்கங்கள் இல்லாமல் போகவில்லை. அவற்றை நாமும் நமது காருண்ய மிக்க சர்க்காரும் பின்பற்றாததுதான் குறை!

''விலைவாசி உயர்வைத் தடுக்கச் சிறந்த வழி பலப் பல சூபர்மார்க்கெட்டுகளைத் தோற்றுவிப்பதுதான்'' என்று தொழிலதிபர் பொள்ளாச்சி திரு மகாலிங்கம் ஒரு முறை என்னிடம் பேச்சுவாக்கில் சொன்னார்.

சென்னையிலும் வேறு பல ஊர்களிலும் சூபர் மார்க்கெட் எனப்படும் கூட்டுறவு அங்காடிகள் நடக்கும் விதத்தைப் பார்த்தும் கேட்டும் அறிந்துள்ள எனக்குத் திரு மகாலிங்கம் கூறியதில் பிடிப்பு ஏற்படவில்லை. இந்தக் கூட்டுறவு பண்டக

**விலையோ குறைவு : மனமோ நிறைவு !**

சாலைகள் அரசாங்க உதவி பெற்றும் ஊழல் மிகுந்து நஷ்டத்தில் நடப்பதால் அந்தச் சுமைகளை யெல்லாம் சுற்றி வளைத்துக் கடைசியில் மக்கள்தானே தாங்க வேண்டும் என்று நினைத்தேன்.

ஆனால் சிந்தாமணியைப் பார்த்த பிறகு அந்த எண்ணம் அடியோடு மாறி விட்டது. சூபர் மார்க்கெட்டுகள் வேண்டும்; ஆனால் அவை சிந்தாமணி போல் நடக்க வேண்டும்! அவ்வாறு நடந்தால் நிச்சயம் விலைவாசிப் பேயை அடித்து விரட்டிவிடலாம் என்ற நம்பிக்கை பிறந்தது.

**கோ**வைப் பிரமுகர் திரு ஜி. ஆர். கோவிந்தராஜுலுவின் தகப்பனார் திவான் பகதூர் திரு ரங்கஸ்வாமி நாயுடு பல விதங்களில் முன்னோடியாகத் திகழ வேண்டும் என்ற ஆர்வம் கொண்டவர். அதனால்தான் இவர் தாம் தொடங்கிய நூற்பாலைக்குப் 'பயனீர்' எனப் பெயரிட்டார். மகன் திரு ஜி. ஆர்.ஜி. அவர்களையும் இந்த முன்னோடி மோகம் நன்றாகப் பற்றிக் கொண்டிருக்கிறது. ''பயனீர் ஹவுஸ்'' என்ற தமது இல்லத்தில் வசிப்பதோடு திருப்தி அடையாமல் பலப் பல துறைகளில் முன்னோடியாகவே விளங்குகிறார். நாட்டின் தொழில்–வர்த்தக வளர்ச்சிக்காக இவர் ஆற்றியுள்ள பணிகளுள் அண்மைக் காலத்தில் இவருக்குப் பெரும் புகழையும் பாராட்டையும் பெற்றுத் தந்துள்ளது. 'சிந்தாமணி–சூபர் மார்க்கெட்'.

இந்தச் சிறப்பு அங்காடி, கோவைமாவட்ட, மத்திய கூட்டுறவு விநியோக, வர்த்தகக் கழகம் (ஹெல்கோப்ஸ்டோர்) என்ற அமைப்பின் ஓர் அங்கமாக உருவாகி வளர்ந்துள்ளது. மேற்சொன்ன நீண்ட பெயருடைய அமைப்பு கோவையில் உள்ள நூற்பு, நெசவு ஆலைகளில் பணியாற்றும் ஆயிரக்கணக்கான ஊழியர்களுக்கு உதவும் நோக்கத்துடன் 1941ம் ஆண்டில் ஆரம்பமாகியது. கூட்டுறவுத் துறையில் பழுத்த அனுபவமுடையவரான திரு டி. ஏ. ராமலிங்கம் செட்டியார் இதைத் தொடங்கக் காரணமாயிருந்தார். திரு ஆர். வேங்கடசாமி நாயுடு, திரு ஜி. கே. தேவராஜுலு போன்ற மதிப்புக்குரிய ஆலை முதலாளிகள் ஆசியும் ஒத்துழைப்பும் நல்கினர். அன்று இதற்கு திரு ஜி. வி. துரைசாமி

நாயுடு காரியதரிசியாக இருந்து திறம்பட நிர்வகித்து இந்தியாவிலேயே இதுபோன்ற இன்னேர் அமைப்பு இல்லை என்று கருதப்படு மளவுக்கு வளர்த்தார். இவ்வளவு புகழ் பெற்ற லென்கோப்ஸ்டோரின் ஒரு பிரிவாகத் தோன்றிய சிந்தாமணி தன் பங்குக்குப் புகழ் குவிக்காமல் போகுமா ?

சிந்தாமணி என்பது தேவாசுரர்கள் கடலைக் கடைந்தபோது கிடைத்த அபூர்வ முத்து. கற்பகத் தரு, காமதேனு போல் நினைத்ததை யெல்லாம் தரவல்லது. இந்த கைய அற்புதமான மணியைத் தட்டிக் கொண்டு போகும் அதிர்ஷ்டம் இந்திரனுக்குக் கிடைத்தது !

''பின்னே ? உனக்கும் எனக்குமா கிடைக்கும் ?'' என்கிறீர்களா ? நமக்கு அந்தச் சிந்தாமணி வேண்டாம் சுவாமி! அதை வைத்துக் கொண்டு 'ஓசி'ப் பிழைப்பு நடத்தவும் வேண்டாம்! தேவையான பண்டங்கள் நியாயமான விலையில் கிடைத்தால் போதாதா ? அதுவும் தெருத் தெருவாக அலையாமல், மருந்து முதல் மளிகை வரை, காய்கறி முதல் காஞ்சீபுரம் சேலை வரை வாழ்க்கைக்குத் தேவையான சகல பொருள்களும் ஒரே கூரையின் கீழ் மலிவான விலையில் வாங்க முடிந்தால் அதைவிடப் பெரிய சௌகரியம் வேறு என்ன இருக்கிறது? கோவை சிந்தாமணி இதைச் செய்து தருகிறது. எனவே, 'நமக்கு இந்திரனின் சிந்தாமணி வேண்டாம் ; ஜி. ஆர். ஜி.யின் சிந்தாமணியே போதும்' என்றுதான் எண்ணத் தோன்றுகிறது.

மலிவான விலையில் கிடைப்பது ஒரு லாபம் என்றால் அங்கத்தினர்களுக்கு விலையில் இரண்டு சதவீதம் தள்ளுபடி செய்து தருவது இரண்டாவது லாபம். மாதக் கடைசியில் மூன்று சதவீதம் தள்ளுபடி செய்வது மூன்றாவது லாபம். பங்குதாரர்களுக்கு வருஷக் கடைசியில் லாபத்தில் பங்கு கிடைப்பது நான்காவது லாபம்.

லாபங்கள் ஒருபுறமிருக்க நஷ்டங்களை எந்த விதங்களிலெல்லாம் தவிர்க்கலாம் பாருங்கள். 1. நல்ல தரமான பொருள்கள் கிடைக்கும் என்ற நம்பிக்கை பொய்ப்பதில்லை. 2. எடையில் ஏமாற்று வித்தைகள் இல்லை. சந்தேகமிருந்தால் நாமே எடை போட்டுப் பார்த்துக் கொள்ளலாம். 3. தப்பித் தவறித் தரக் குறைவான பண்டத்தை வாங்கிச் சென்று விட்டோமென்றால் ஓரிரு தினங்களுக்குள் திருப்பிக் கொடுத்து அதற்குப் பதில் வேறு பொருளைப் பெற்றுச் செல்லலாம்.

சாதாரணமாகக் கடை பில்களில் ''விற்ற பொருள்களைத் திருப்பி எடுத்துக்கொள்ள மாட்டோம்'' என்ற வாசகம்தான் காணப்படும். சிந்தாமணி பில்லில் அதற்கு நேர் மாறாக ''நியாயமான காரணம் இருந்தால் திருப்பிக் கொணர்ந்து மாற்றிக்கொள்ளுங்கள்'' என்று அச்சடித்து வைத்திருக்கிறார்கள்!

இந்தச் சலுகைகளெல்லாம் இருப்பதால் மக்கள் சாரி சாரியாக வந்து மொய்க்கிறார்கள். சற்று ஒதுக்குப்புறமான நகர்ப் பகுதியாக இருந்தாலும் ஓர் ஆட்டோ வைத்துக் கொண்டு வரக்கூடத் தயங்குவதில்லை. மேலும் நகரின் எல்லைப்புறங்களில் வசிப்பவர்கள் சிந்தாமணிக்கு வந்து போக அந்நிறுவனமே விசேஷ பஸ் விடுகிறது. ஐந்து ரூபாய்க்குச் சாமான் வாங்குவதாகச் சொன்னால் போதும்; பஸ் கட்டணம் கிடையாது!

இம்மாதிரி யெல்லாம் வசதிகளைத் தந்து மக்களை ஈர்த்துச் சிந்தாமணியின் வருவாயை எக்கச்சக்கமாக உயர்த்திக் காட்டியிருக்கிறார் திரு ஜி. ஆர். கோவிந்தராஜுலு. வாடிக்கையாளர், அங்கத்தினர்களின் எண்ணிக்கை, விற்பனை மதிப்பு எல்லாம் ஏழாண்டுகளில் பத்து மடங்காகப் பெருகியிருக்கிறது. இந்த

□ சிந்தாமணிக்கு விஜயம் செய்த அமைச்சர் திரு டி. ஏ. பை அவர்களை மாலை அணிவித்து வரவேற்றார் திரு ஜி. ஆர். ஜி.

□ ''வாங்கவேண்டியதெல்லாம் வாங்கியாச்சா ? வீடு திரும்ப பஸ் ரெடி !''



ஆண்டும் ஒரு புது ரிகார்டை ஏற்படுத்தியிருக்கிறது கோவை சிந்தாமணி. 71–72ல் ரூ. 5.6 கோடியாக இருந்த விற்பனை 72–73ல் ரூ. 7.28 கோடியாக உயர்ந்திருக்கிறது!

கோவையிலேயே இரு கிளைகள் தோன்றியதுடன் (மூன்றாவதும் ஆரம்பமாகவிருக்கிறது) உடுமலைப்பேட்டையிலும் ஒரு கிளை இருக்கிறது. இவற்றின் சிறப்பான இயக்கத்தைப் பார்த்துவிட்டு அரசாங்கமே, ஈரோடு, திருச்சி ஆகிய இடங்களில் உள்ள கூட்டுறவு சிறப்பு(?) அங்காடிகளைச் சிந்தாமணி ஏற்று நடத்த வேண்டும் என்ற கோரிக்கையை விடுத்தது. இந்தச் சவாலை திரு ஜி. ஆர். ஜி. ஏற்றதும் முந்திய வாக்கியத்தில் நான் சேர்த்துள்ள கேள்விக் குறி கண்டிடி எறியப்பட்டது! அதிசயிக்கத் தக்க முன்னேற்றங்கள் நிகழ்ந்துள்ளன.

திருச்சி சூபர் மார்க்கெட்டில் நடைபெற்று வந்த சில ஊழல்களைத் தாங்கள் நிர்வாகப் பொறுப்பு ஏற்ற பிறகு கண்டுபிடித்துச் சீராக்கிய விவரத்தைச் சிந்தாமணியின் காரியதரிசி திரு ராமஸ்வாமி கூறக் கேட்டபோது மனம் பதைத்தது. கூட்டுறவு என்ற பெயரில் கூட்டுக் கொள்ளை அல்லவா அடித்திருக்கிறார்கள்!

உதாரணமாகத் துணிமணிகள் விற்பனைப் பகுதியில் மொத்தம் இத்தனை ரூபாய் மதிப்புள்ள சரக்கு கையிருப்பில் உள்ளது எனக் கணக்கு இருந்தால் விற்றது போகப் பாக்கி இவ்வளவு என்று ஏட்டளவில் கணக்குச் சீராகவே இருக்கும். ஆனால் உண்மையில் நடந்தது என்ன? பல துணி மணிகளை 'அமுக்கி'க்கொண்டு போய்விட்டு அதன் மதிப்பை ஈடுகட்டும் வகையில் மீதமுள்ள துணிமணி வகையறுக்களின் லேபிள்களில் விலையைக் கூட்டிப் போட்டு விடுவார்கள்! ஆக வெளி மார்க்கெட்டில் உள்ளதை விட சூபர் பஜாரில் துணி மணிகளின் விலை கூடுதலாய் இருக்கும். மக்கள் என்ன அசடர்களா? சிறப்பு அங்காடியைப் புறக்கணித்தார்கள். விளைவு: நஷ்டம்.

சிந்தாமணி நிர்வாகத்தின்கீழ் இதுபோன்ற ஊழல்கள் எல்லாம் சீர்ப்பட்டுத் தற்போது ஈரோடு, திருச்சி சிறப்பு அங்காடிகள் சிந்தாமணி என்ற பெயரிலேயே சக்கைப்போடு போடுகின்றன. மக்களின் நன்மதிப்பை அமோகமாகப் பெற்று வருகின்றன.

சிந்தாமணியின் வெற்றிக்கு நமது சிந்தனைக்கு எட்டாத பல காரணங்கள் உண்டு. நேரில் போய்ப் பார்த்து நடைமுறைகளை ஆராய்ந்தறிந்தால்தான், 'அடாடா வியாபாரத்தை இத்தனை நவீனமான முறையில் நடத்த முடியுமா?' என்று வியப்போம். சிந்தாமணிக்கு விஜயம் செய்த மத்திய அமைச்சர் திரு டி. ஏ. பை அவர்களும் இதைத்தான் வியந்து போற்றினார். 'மனம் வைத்தால், செயலூக்கம் இருந்தால் நாட்டில் உற்பத்தியாகும் பொருள்களை மக்களுக்கு நியாய விலையில் விநியோகிப்பது சிரமமில்லை. நவீன முறைகளைக் கையாண்டு வெற்றி பெறலாம். இதற்கு இந்த ஸ்தாபனம் ஓர் எடுத்துக்காட்டு'' என்று கருத்துப்பட எழுதியே தந்துவிட்டார்.

வியாபாரத்தை விஞ்ஞான ரீதியாகவே நடத்துகிறார்கள் சிந்தாமணியில். மலிவான விலையில் பொருள்களை விற்றாலும் லாபகரமாக இயங்க வேண்டும் என்ற கருத்துடையவர்களாகவும் இருக்கிறார்கள். மொத்தத்தில் லாபகரமாக இயங்கினால் போதாது. அதன் ஒவ்வொரு பிரிவும் கூடியவரையில் லாபகரமாக இயங்க வேண்டும் என்பதில் கண்ணாக இருக்கிறார்கள். ஒரு பிரிவில் லாபம் சற்றுக் குறைந்தால் அதற்கான காரணங்கள் என்ன என்று ஆராய்கிறார்கள். தேவைக்கு அதிகமாக விற்பனையாளர்களை அமர்த்தியிருக்கலாம் அல்லது தேவைக்கு அதிகமாகப் பொருள்களை வாங்கிக் குவித்திருக்கலாம். இடத்துக்கான வாடகை கட்டி வருகிறதா, விற்பனை விலையில் லாபப் பங்கு எத்தனை சதவிகிதம் என்றெல்லாம் பல அம்சங்களையும் நுணுகிப் பார்த்துத் தேவையானவற்றைத் திருத்தங்களைச் செய்கிறார்கள். ''விற்பனை விலையில் லாபப் பங்கு சிறிதளவேயானாலும் ஏராளமாக விற்பனையாகும்போது கணிசமான அளவு லாபம் கிடைத்துவிடும் என்பதை உணர்ந்திருப்பதால் விற்பனையை அதிகரிக்குமாறு ஜி. ஆர். ஜி. அடிக்கடி எங்களை முடுக்கி விட்டுக் கொண்டேயிருப்பார்'' என்று பொதுஜனத் தொடர்பு அதிகாரி திரு காசிநாதன் தெரிவித்தார். விற்பனையை அதிகரித்துக் கொண்டே போவதிலும் பல நுணுக்கங்கள் உள்ளன. அவற்றை இங்குள்ள விற்பனையாளர்கள் நன்கு அறிந்துகொள்ள வகுப்புக்களே நடக்கின்றன.

வகுப்புக்கள் மட்டுமல்ல, வசதிகளும் உண்டு இங்கு பணியாற்றும் ஊழியர்களுக்கு. சம்பளம், போனஸ் போன்ற மாமூலான விஷயங்கள் ஒருபுறமிருக்க, இவர்கள் அமைத்துக் கொண்டிருக்கும் 'கிளப்' மூலம் எத்தனையோ சௌகரியங்களைப் பெற முடிகிறது! இதற்கெல்லாம் வழிவகுத்துள்ள திரு ஜி. ஆர். கோவிந்தராஜுலு ஊழியர்களின் சேமிப்பு நிதியைச் சிந்தாமணியின் மூலதனத்தில் ஒரு பங்காக்கியும் இருக்கிறார். இதனால் ஊழியர்களுக்குச் சிந்தாமணி வெற்றிகரமாக நடக்க வேண்டும் என்பதில் ஓர் ஆத்மார்த்தமான ஈடுபாடு வளர்ந்திருக்கிறது.

இவ்வாறெல்லாம் புதுமைப் புரட்சிகளைச் செய்திருப்பதால்தான் அகில இந்தியரீதியில் சிறப்பு அங்காடிகளைப் பரவலாக நடத்துவது பற்றி யோசிக்க அமைந்த குழுவில் ஓர் அங்கத்தினராயிருந்து உதவ வேண்டும் என்று மத்திய அரசு ஸ்ரீ ஜி. ஆர். ஜி. அவர்களைக் கோரியிருக்கிறது.

கூட்டுறவு முறையில் சிறப்பங்காடியை நடத்துவதென்பது கூட்டல் கழித்தல் வியாபாரம் மட்டுமல்ல என்பதை அரசு அறிந்து கொண்ட மட்டில் மகிழ்ச்சிதான். நவீன விஞ்ஞான ரீதியில் செயல்படுவதோடு வாடிக்கையாளர்களைச் சட்டென்று எடை போடுகிற மனோதத்துவம்கூடத் தெரிந்திருக்கவேண்டும், இதில் பணியாற்றுகிறவர்களுக்கு.

உதாரணமாக சிந்தாமணியின் விவசாயப் பொருள்களை விற்கும் பிரிவு, ''விவசாய சேவா நிலையம்'' என்ற பெயர்ப் பலகையைத் தாங்கி நிற்கிறது. சிறப்பங்காடியின் வாசலில் ''சிந்தாமணி உங்களை வரவேற்கிறது'' என்று பெயர்ப் பலகை காணப்படுகிறது. சிறப்பங்காடியின் பல பகுதிகளிலும் இலேசான இன்னிசை ஸ்பீக்கர்களில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. இவையெல்லாம் சின்ன விஷயங்கள்

எனத் தோன்றும், மேலெழுந்தவாரியாகப் பார்த்தால். ஆனால் மனோதத்துவ ரீதியில் பெரிய சாதனைகளுக்கு வழி வகுக்கக்கூடியவை இவை.

''இத்தனை மக்கள் வந்து போகிற இடத்தில் திருட்டுப் புரட்டு ஏதும் நடக்காமலிருக்க வேண்டுமே?'' என்ற நியாயமான கவலையை வெளியிட்டேன்.

''இதோ இவரைக் கேளுங்கள்'' என்றார் காசிநாதன்.

அடுத்த கணம் கட்டுமஸ்தான தேகமும் குளோஸ் கிராப்பும் நறுக்கு மீசையும் கொண்ட ஒருவர் என் கரத்தைப் பற்றிக் குலுக்கி, ''நான்தான் ஸெக்யூரிடி ஆபீஸர்'' என்றார்.

''அதை நீங்கள் சொல்லவே வேண்டாம். நீங்கள் பற்றிய இடம் பேசுகிறது'' என்று கூறி விடுபட்ட கரத்தை இடது கையால் தடவி விட்டுக் கொண்டேன்.

''இதோ பாருங்கள்! அரிசிக்கு எவ்வளவு பெரிய க்யூ! வெளியே அரிசி விலை அதிகரித்து விட்டது. நாங்கள் இன்னும் பழைய விலைக்கே தருகிறோம். அதனால் இங்கிருந்து வாங்கிப் போய் வெளியே விற்க முயல்பவர்களும் இந்தக் க்யூவில் இருப்பார்கள். நாணயஸ்தர்கள் நாற்பது பேர்களுக்கிடையில் ஒரு கேடியை இனம் கண்டுகொள்ள வேண்டும் நான்!''

பாதுகாப்பு அதிகாரியைப் பாதுகாப்புப் பணியைத் தொடர விட்டுவிட்டு, 'சென்னைக்குத் திரும்புகிறேன்' என்று கூறி விடைபெற திரு ஜி. ஆர். கோவிந்தராஜுலு அவர்களின் இல்லத்தை அடைந்தேன்.

இலேசாக ஒரு கீதத்தை ரசனையுடன் விசிலடித்தபடி வராந்தாவில் நடமாடிக்கொண்டிருந்தார் அவர். கொஞ்சமும் கவலையற்ற அமைதியான அந்தத் தோற்றம் என்னை ஏமாற்றி விடவில்லை. சிந்தாமணியின் காரியதரிசியிடமும் சரி, சாதாரண ஊழியரிடமும் சரி, சிறப்பு அங்காடியை மணிக் கணக்கில் சுற்றிப் பார்த்துவிட்டு ஒன்றுமே வாங்காமல் திரும்பும் ஒரு பெண்மணியிடமும் சரி, ஒரே விதமான அமைதியுடன் புன்னகை தவழத்தான் பேசுவார் திரு ஜி. ஆர். ஜி.

எனவே இப்போதுகூட சாந்தமான அந்த வெளித் தோற்றத்துக்குப் பின்னால் பரபரப்பான திட்டம் ஏதாவது உருவாகிக் கொண்டிருக்கும் என்றே கருதினேன். அதற்கேற்றாற் போல் திரு ஜி. ஆர். ஜி. அவர்கள், ''சிந்தாமணிக்கே சொந்தமான பனியன் தொழிலகமும், சூரியகாந்தி எண்ணெய் எடுக்கும் ஆலையும் ஏற்படுத்தலாம் என்றிருக்கிறோம். இதைக் குறிப்பிட்டு நீங்கள் எழுதினால் இந்தப் பக்கத்தில் உள்ள விவசாயிகள் பயனடைவார்கள்'' என்றார்.

''ரொம்ப சரி'' என்று கூறி விடைபெற்றேன். ரயில் சென்னை நோக்கி வந்துகொண்டிருந்தபோது சிந்தாமணி நிறுவனத்தின் வெளியீடு ஒன்றினைப் புரட்டிப் பார்த்தேன். முதல் பக்கத்தில் அண்ணல் காந்தி அடிகளின் மணி மொழி அச்சாகி யிருந்தது:

''நமது வியாபார கேந்திரத்துக்குள் நுழைபவர்களுள் வாடிக்கையாளரே மிகவும் முக்கியமானவர். அவர் நம்மை நம்பி வாழவில்லை. நாம்தான் அவரை நம்பியிருக்கிறோம். அவர் நமது வேலையில் குறுக்கிடுகிறவரல்ல. நமது அலுவலின் காரண புருஷரே அவர்தான். நமது வர்த்தகத்தில் அவர் ஒரு வெளி ஆசாமி அல்ல. அதில் ஓர் அங்கமாக விளங்குகிறவர். அவருக்கு ஊழியம் செய்வதால் நாம் அவருக்கு எந்தச் சலுகையும் காட்டிவிடவில்லை. அவருக்கு ஊழியம் புரிய நமக்கு ஒரு வாய்ப்பளித்ததன் மூலம் அவர்தான் நமக்குச் சலுகை காட்டியிருக்கிறார்!''

இருநூறு ஆண்டுகள் அனுபவ பாத்தியதை கொண்டாடிய பிரிட்டிஷாரிடமிருந்து பைசா காசு தராமல் நாட்டை மீட்ட காந்தியடிகளுக்கா வியாபார தந்திரம் தெரியாது?

அந்தத் தந்திரத்தைச் சிந்தாமணியும் புரிந்து கொண்டிருக்கிறது! - **கி. ராஜேந்திரன்**



# அடிமறந்தால் ஆழம்

## கு.ப.ராஜகோபாலன்

இந்தமாதிரி விசித்திரப் பிரகிருதியைச் சந்திப்பது ரொம்ப அபூர்வம். கு. ப. ரா. தம் கதையிலாவது நேர்மைக்கு எடுத்துக் காட்டாக ஒருவனைச் சந்திக்கலாமே என எண்ணினர் போலும்!

விதி எப்படி எல்லாமோ வேலை செய்ததில் கடைசியாக, பி. ஏ. தேறின நான்கு வருஷங்களுக்குப் பிறகு ராஜம் ஒரு தாலூகா ஆபீஸில் குமாஸ்தாவாக மாசம் முப்பத்தைந்து ரூபாய்க்கு உயிர் ரத்தத்தை விற்றுக் கொண்டிருந்தான்.

ஆனால், அவன் சர்வீஸில் நுழைய ஒப்புக் கொண்டது, சில காரணங்களைக் கொண்டு. சர்க்கார் உத்தியோகமும் ஒருவிதத்தில் பொதுஜன சேவைதானே! நேர்மையுடன் பாடுபட்டால் அங்கேயும் உண்மையான தொண்டு புரியலாம்; நிர்வாகத்தில் எவ்வளவு சீர்திருத்தங்களுக்கு அடிகோலலாம் — இந்த மாதிரிக் கனவுகளுடன்தான் அவன் உத்தியோகத்தை ஏற்றுக் கொண்டான்.

தன் கொள்கைகளை உத்தியோக நடவடிக்கைகளில் அனுஷ்டானத்துக்குக்கொண்டு வர முயற்சியும் செய்தான். பக்கத்தில் உட்கார்ந்திருந்த குமாஸ்தாக்கள் அவனைக் கிண்டல் செய்தார்கள்; கேலி செய்தார்கள். ராஜம் பொறுமையுடன் தன் வேலையைக் கறாராகச் செய்தான். தாசில்தார் சிரஸ்தேதார்களுக்கு அவனிடம் மதிப்பு ஏற்பட்டது. ஒரு காகிதத்தையாவது அவன் தாமதம் செய்வது கிடையாது. அன்றன்றே வேண்டிய தஸ்தாவேஜுகளைத் தேடி எடுத்துப் படித்து விஷயத்தைச் சுருக்கமாகத் தன் அபிப்பிராயத்துடன் எழுதித் தாசில்தாரின் உத்தரவுக்கு அனுப்பி விடுவான்.

அவன் அப்படிக் கறாராக வேலை பார்த்தது தாசில்தாருக்கும் சிரஸ்தேதாருக்கும் சில மாசங்களில் சங்கடமாகப் போய் விட்டது. அவன் எழுதி அனுப்பிவிட்ட காகிதங்கள் அவர்கள் பெட்டியில் கமந்து விட்டன. அவர்களால் உடனே உத்தரவு போட முடியவில்லை.

இருவரும் தாராளமாகப் பணம் வாங்குபவர்கள்; பழைய பெருச்சாளிகள். மற்றக் குமாஸ்தாக்களும், அவர்களும் கூட்டு. கட்சிக்காரன் பணத்துடன் வந்தால்தான் காகிதம் பைசலாகும். ஆபீஸில் பட்டப் பகலில் பேரம் பேசினார்கள். ராஜம் அதையெல்லாம் கண்டு திகைத்தான். தாசில்தாரே உடந்தையாய் இருந்தது அவனுக்கு வெறுப்பை அளித்தது. வேலியே பயிரைத் தின்பது என்பார்களே, அந்த மாதிரி மேல் அதிகாரியே அக்கிரமம் செய்தால் குமாஸ்தாக்களின் அட்டகாசத்தைக் கேட்கவும் வேண்டுமா?

ராஜம் தன்னால் முடிந்த வரையில் எல்லோரையும் அலட்சியம் செய்தே வேலை பார்த்தான். தாசில்தாருக்குக்கூட அவனிடத்தில் பயம். அவன் காகிதங்களில் அவர் ஒன்றும் பணம் வாங்க முயல்வதில்லை. ஏனென்றால் ராஜம் எப்போதும் மனுவில்



கண்ட கோரிக்கையை ஆதாரங்களுடன் நன்ருக ஆராய்ந்து அதிகாரி இப்படித்தான் உத்தரவு போட வேண்டும் என்று எழுதி விடுவான். அதற்கு மேல் தாசில்தார் என்ன செய்ய முடியும்? அதன்படி உத்தரவு போட்டுத் தானே ஆக வேண்டும் ? போடாவிட்டால் அப்பீலில் கேள்வி நிச்சயம் வரும்.

அவன் பட்டா மாறுதல் குமாஸ்தா. வாரிசுப் பதிவு செய்வதில் மனுக்கள் வரும் போது கட்சிக்காரர்கள் அவனை வந்து எவ்வளவோ வலை போட்டுப் பார்ப்பார்கள். நன்ருக விசாரித்து நியாயம் எந்தப் பக்கமோ, அந்தப்படிதான் சிபாரிசை எழுதி வைப்பான்.

பொன்வயலில் ஒரு பெரிய மிராசுதார் ரங்கநாதன். அவன் இளம் வயசில் இறந்ததன் காரணமாக அவனுடைய வாரிசு விஷயமாகத் தகராறு ஏற்பட்டது. அவனுக்கு ஒரு மைனர்க் குழந்தைதான் இருந்தது. அதன் தாய் லக்ஷ்மி, குழந்தைக்குத் தான் கார்டியனுக வேண்டும் என்று தாசில்தாருக்கு மனுப் போட்டிருந்தாள். இறந்து போனவரின் மாமா ஒருவர், தாமே கார்டியனுக வேண்டும் என்று குறுக்கிட்டார். தாசில்தாரை அணுகித் தம் கட்சிக்குப் பலம் தேடினுர்.

தாசில்தார் ராஜத்தைக் கைகாட்டி விட்டு விட்டார். ''குமாஸ்தாவை எப்படியாவது சரிப்படுத்தி உங்களைக் 'கார்டிய'னுகச் செய்யலாம் என்று சிபாரிசு செய்து காரணங்கள் கொடுத்து எழுதச் சொல்லுங்கள். நான் உத்தரவு போட்டு விடுகிறேன் '' என்ருர்.

ராஜம் அன்று காரியாலயத்தில் அதிகமாக வேலை செய்ததால் சிரமம் மேலிட்டு வாசல் திண்ணையில் சாய்வான நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்தான். பொன்வயல் கிராமக் கணக்குப் பிள்ளை இடுப்பில் வேஷ்டியைச் சுற்றியவண்ணம் மெதுவாக அருகில் வந்து, ''எஜமான்!'' என்ருன்.

'' யாரது ?''

'' நான்தான் சங்கரன் !''

''என்ன சங்கரையர் ? என்ன விசேஷம்?''

''ஒன்றும் இல்லை. நம்ம கிராமத்து வாரிசு விஷயமாகத் தகராறு இருக்கிறது; அந்த அம்மாள் உங்களைக் கண்டு விஷயத்தைச் சொல்ல வேண்டும் என்று வந்திருக்கிருள்.''

''என்ன சங்கரையர்? இங்கே எதற்காக அவர்களை அழைத்துக் கொண்டு வந்தீர்? மனுவைப் பார்த்து எப்படிச் செய்ய வேண்டுமோ அந்தப்படி எழுதி வைக்கிறேன்.''

அப்போது ஒரு சிறு பையனைக் கையில் பிடித்து அழைத்துக் கொண்டு லக்ஷ்மி அவன் முன் வந்து நமஸ்காரம் செய்தாள்.

அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டுவிட்டது. நாற்காலியை விட்டு வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து, ''அம்மா! அம்மா! அப்படியெல்லாம் செய்யாதீர்கள். நியாயமாக உங்கள் கட்சி சரியென்ருல், அதே மாதிரி உத்தரவாகும். கவலைப்பட வேண்டாம் ; இதற்காக ஏன் இவ்வளவு தூரம், இந்த இரவில்?'' என்று சொல்லிவிட்டுக் கொஞ்சம் சங்கோசத்துடன் நின்ருன்.

'' நீங்கள் சகோதரர்போலே. என்னைக் காப்பாத்தணும். அவர் கார்டியனுனுல் என் குழந்தை வாயில் மண் விழுந்துவிடும் '' என்று லக்ஷ்மி கண்ணீர் உதிர்த்துச் சொன்னுள்.



''கட்டாயம் பார்த்துக் கூடுமானதைச் செய்கிறேன், அம்மா! இரவு இனிமேல் எப்படி ஊருக்குத் திரும்பிப் போவீர்கள்? இங்கே இருந்துவிட்டுக் காலையில் போகலாம்'' என்று சொல்லி, ''அடியே, இவாளை அழைத்துக் கொண்டு போ!'' என்று தன் மனைவியைக் கூப்பிட்டுச் சொன்னான்.

''இல்லே! வண்டி வந்திருக்கிறது. போய் வருகிறேன்'' என்று சொல்லி ஒரு பரிதாபப் பார்வை பார்த்துவிட்டு லக்ஷ்மி வெளியே போனாள்.

சங்கரையர் அருகே வந்து, ''வண்டியில் ஒரு மூட்டை அரிசி வந்திருக்கிறது. இப்படித் திண்ணையோரத்தில் இறக்கிப் போடச் சொல்லட்டுமா?'' என்றார்.

ராஜத்துக்குக் கோபம் ரௌத்திராகாரமாக வந்தது. ''ஏங்காணும், என் கடமையைச் செய்ய எனக்கு லஞ்சம் கொடுக்கிறீரா?'' என்று கத்தினான்.

''யஜமான்! மன்னிக்கணும்'' என்று கணக்குப்பிள்ளை மெதுவாக நகர்ந்தான்.

ராஜத்தின் உள்ளம் கலங்கிவிட்டது. ஓர் அரிசி மூட்டையின் விலை கொண்டதா, தன் மனிதத் தன்மை என்று ஆச்சரியப்பட்டான். ஆனால் அது அவனுக்குப் புதிய அனுபவம் அல்ல; பலரை ஆபீசில் தாறுமாறாக வைது அனுப்பியிருக்கிறான்.

ஒரு சமயம் அவன் வசூல் குமாஸ்தாவாக ஒரு நாள் வேலை பார்த்தபோது ஒரு குடியானவனுக்கு ஏதோ டிபாசிட் பணத்தைத் திருப்பிக் கொடுக்க நேர்ந்தது. கஜானா குமாஸ்தாவும் ஷராப்பும் அவனிடம் பணம் வாங்கிவிடுவார்கள் என்று ராஜம், தானே பில்லை மாற்றிப் பணம் வாங்கிக் குடியானவன் கையில் கொடுத்தான். குடியானவன் தான் வாங்கிய பத்து ரூபாயில் ஒரு ரூபாயை ராஜத்தின் மேஜை மேல் வைத்தான்.

வேறு யாராவது அப்படிச் செய்திருந்தால் அவன் அமர்க்களப்படுத்தியிருப்பான். அறியாத கிழவன் என்று அவனை ஒன்றும் சொல்லாமல், ''வேண்டாம், எடுத்துக்கொள்!'' என்றான். கிழவன் தப்பர்த்தம் செய்து கொண்டான்.

''கடன் வாங்கிக் கட்டின பணமுங்க யஜமான்! எங்காச்சியும் இந்த ஒரு ரூபாயைச் சரிக்கட்டிக் கொடுக்கணுங்க'' என்றான்.

''அடே, பணமே வேண்டாம்; எடுத்துக் கொண்டு போ!'' என்றான் ராஜம்.

கிழவனால் அவன் சொன்னதை நம்ப முடியவில்லே.

''யசமான் நிசமாங்களா? கோவிச்சுக்காதீங்க!''

''இல்லே, போ!''

''மவராசரா யிருங்க; உத்தியோகம் ஓங்கணும்!'' என்று சொல்லிவிட்டுப் போனான் கிழவன்.

இந்த மாதிரிப் பழைய நினைவுகளில் ஆழ்ந்து படுத்துக் கொண்டிருந்தான் ராஜம். அப்பொழுது வாசலில் மணிச் சத்தத்துடன் ஓர் இரட்டை மாட்டு வண்டி வந்து நின்றது. அதிலிருந்து இருவர் இறங்கித் தெருவில் நின்றார்கள். ஒரு குடியானவன் திண்ணை ஏறி வந்து, ''பண்ணை யஜமானும் ஜமீன்தார் ஐயாவும் வந்திருக்காங்க; கூப்பிடறாங்க!'' என்றான்.

ராஜத்துக்குக் கோபம் வந்தது. ''யாரடா அவர்கள், யாரடா நீ?'' என்று உரக்கக் கத்தினான்.

இதைக் கேட்டதுமே தெருவில் நின்றவர்கள் கொஞ்சம் ஆச்சரிய மடைந்து போயிருக்க வேண்டும். ஏனென்றால், இந்த மாதிரி அவர்களை யாரும் நடத்தி அவர்களுக்கு வாடிக்கை இல்லே. தாசில்தார் ...ரைக் கண்டதும் வண்டியை விட்டு இறங்கித்தான் அவர்களுடன் பேசுவார். டிபுடி கலெக்டர் ஆபீஸ், கலெக்டர் ஆபீஸ் எல்லாம் அவர்கள் கைக்கு உட்பட்டவை. ராஜத்தின் கேள்வியைக் கேட்டதும், ''இவன் யாரோ பயமறியாத கன்று; புதிசு!'' என்று சொல்லிக்கொண்டு படியேறி வந்தார்கள். வந்தவர்கள் தாங்களாகவே இரண்டு நாற்காலிகளில் உட்கார்ந்தார்கள். ராஜம் அதைச் சகித்துக் கொண்டான்.

''நீங்கள்தான் பட்டா மாறுதல் குமாஸ்தாவோ?'' என்று கேட்டார் ஜமீன்தார்.

''ஆமாம், ஏன்?'' என்றான் ராஜம்.

''பெரிய பண்ணை வாரிசு விஷயமாக மனு வந்திருக்கோ?''

''வந்திருக்கலாம்; என்ன விசேஷம்?''

''அந்தம்மாள் நடத்தை சரியில்லே. சொத்தைப் பாழாக்கி விட்டு ஓடி விடுவாள். இவர் கார்டியனாக ஆனால்தான் வாரிசுக்குச் சொத்து நிலைக்கும். அந்தப்படி—''

''அதெல்லாம் தாசில்தார் அவர்கள் நிர விசாரித்துச் செய்வார்கள்.''

''சரிதான், ஸார்! அவரைப் பார்த்து விட்டுத்தான் வருகிறோம். உங்களிடத்திலும் ஒரு வார்த்தை சொல்லச் சொன்னார்.''

''தேவையே இல்லேயே!''

''கொஞ்சம் கேளுங்க. அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்துவிடுவோம்.''

''என்ன ஏற்பாடு?''

''அதுதான் — எங்களுக்குத் தெரியும்; தகுந்தபடி மரியாதை செய்து விடுவோம். அதைப் பார்த்துச் சரிப்படுத்தி விடுங்க.''

''என்னையா சொல்லுகிறீர்?'' என்று ராஜம் பொங்கிக் கொண்டு கேட்டான். கோபத்தில் அவன் உடல் நடுங்கிற்று.

''வெறும் பேச்சுப் பேசுவோமா?'' என்று சொல்லிவிட்டு ஜமீன்தார் மற்றொருவர் பக்கம் கையை நீட்டினார். அவர் நாலைந்து நூறு ரூபாய் நோட்டுக்கள் அடங்கிய ஒரு மடிப்பை நீட்டினார். ராஜம் அதையெல்லாம் சாவதானமாகப் பார்த்தான். ஜமீன்தார் அதை ராஜத்தினிடம் நீட்டினார். ராஜம் அதைக் கையில் வாங்கிக் கொண்டான்.

ஜமீன்தார் மற்றவரைப் பார்த்துக் கண் சிமிட்டினார்; 'காரியமாகி விட்டது பாருங்கள்!' என்று சொல்லும் பாவனையாக.

உடனே ராஜத்தின் காதோடு காதாக ஏதோ ரகசியம் பேசுவதற்காக எழுந்து அவனருகில் வந்தார் ஜமீன்தார். அதே நிமிஷம் நூறு ரூபாய் நோட்டுக்கள் படபடவென்று

அவர் முகத்தில் வந்து விழுந்தன. ஜமீன்தார் உலுக்கி விழுந்து பின்வாங்கினார். ''போங்கள், வெளியே!'' என்று உரக்கக் கத்தினான் ராஜம்.

''என்ன ஓய், உமக்கு இவ்வளவு திமிரா? ஐந்நூறு ரூபாய் போதாதா, நீர் செய்யப் போகிற வேலைக்கு?'' என்று ஜமீன்தார் சொன்னார்.

''போகிறீரா அல்லது சப் இன்ஸ்பெக்டரைக் கூப்பிடட்டுமா?''

''அந்தக் கள்ளி, நமக்கு முன்னால் வந்து மயக்கி விட்டாள், ராஜா!'' என்று பண்ணைக்காரர் ஜமீன்தாரைப் பார்த்துச் சொன்னார்.

''ஓய், நீர் இந்த ஆபீஸில் நாளைக்கு இருக்கிறதைப் பார்த்து விடுகிறேன்!'' என்றார் ஜமீன்தார்.

''போ என்றால் போக மாட்டாய்?''

''வாருங்கள் ஸார், இவனுடன் நாம் ஏன் பேச வேண்டும்?''

இருவரும் கீழே இறங்கி வண்டி ஏறினதும் ராஜம் சிரமம் மேலிட்டு நாற்காலியில் சாய்ந்தான்.

அவன் மனைவி வந்தாள். ''என்ன இரைச்சல்? ஆமாம், விடிந்தால் விறகு கிடையாது; உலைக்கு அரிசி கிடையாது—''

''எல்லாம் விடியட்டும்! போ, உள்ளே!''

## அறுபது தாண்டிய ஆறுமுகன் அடியார்



மத்திய சர்க்கார் சட்ட இலாகா துணைக் காரியதரிசியாகப் பணியாற்றும் திரு ஜி. வேங்கடசுப்பிரமணிய அய்யர் அவர்கள் ஒரு விசித்திரமான மனிதர்.

அந்தஸ்துக்குத் தகுந்த தோரணை அவரிடம் கிடையாது. மாதிரிக்கு ஓர் அல்சேஷன் நாய்கூட அவர் வளர்க்கவில்லை.

வரவேற்பு அறை ஏமாற்றம் அளிக்கிறது.

சுவர் முழுதும் சுவாமி படங்கள்.

கல்கி விநாயகர் முன்நின்று ஆசி கூறுகிறது.

வட்ட மேஜை மீது பிலிம்பேர், ஸ்டார் அண்ட் ஸ்டைலுக்குப் பதிலாக, பவன்ஸ் சஞ்சிகையும் காமகோடி சஞ்சிகையும் குலாவுகின்றன.

போதாக் குறைக்குத் திருப்புகழ் வைத்தியம் வேறு.

தாம் பித்தனுவது போதாதென்று தில்லியையே திருப்புகழ் பித்தாக்கிவிட்டிருக்கிறார்.

இருபது வருடங்களுக்குமுன், சிறிய அளவில் தொடங்கிய இவர் திருப்புகழ் வகுப்புக்கள் இப்போது தில்லி முழுதும் வியாபித்து விட்டன.

ஆண், பெண், பாலகர் உட்பட இதில் கிட்டத்தட்ட முந்நூறு பேர்கள் திருப்புகழ் கற்பவர்கள்.

உத்திரசுவாமி மலையில் நடந்த முதல் படி விழா திரு ஜி. வி. தலைமையில்தான் நடந்தது.

அவர் செய்த பேறு அவர் இல்லக்கிழத்தியாரும் இதில் அபரிமிதமாக ஈடுபட்டுள்ளார்கள்.

பாலகர்களுக்கென்று இப்போது ஒரு தனிப் பகுதி திருமதி சாந்தா ராஜகோபாலனின் மேற்பார்வையில் நடத்துவருகிறது.

நல்ல அறிகுறி.

சமயத்துக்கு நல்ல சமயம். சமீபத்தில் அறுபது தாண்டிய இந்த ஆறுமுகன் அடியார் அநேக ஆண்டுகள் வாழ்ந்து இறைத் தொண்டாற்ற ஆண்டவன் அருளட்டும்.

—சுப்புடு

# 20. பொழுது புலர்ந்தது

'பேசாமல் இன்றிரவே ஊருக்குக் கிளம்பிப் போய்விடலாமா?' என்ற இந்தக் கேள்வியை — இப்போது மட்டுமல்ல, நேற்றிரவு முதலே தன்னுள் கிளர்ந்து விட்டிருந்த அதே கேள்வியை— கேட்டுக் கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தான் நரசு.

ஆமாம்; அவனை நேர்முகப் பேட்டிக்கென்று வரச் சொன்ன கம்பெனி மூடிக் கிடக்கிறது. இன்னும் எத்தனை நாட்களுக்கு அல்லது மாதங்களுக்குச் சாத்திக் கிடக்குமோ? அதுவரையில் இங்கு சும்மாத்தானே இருந்தாக வேண்டும்? அப்படியே காத்திருந்தாலும் அந்தக் கம்பெனி திறக்கப்பட்ட பின் அங்கே காலியாயிருக்கும் துணைக் கணக்காயர் உத்தியோகம் அவனுக்கே கிடைக்கும் என்பது என்ன நிச்சயம்?

வேலைநிறுத்தம் செய்திருப்போரின் முக்கியமான கோரிக்கைகளில் வேலையிலிருந்து நீக்கப்பட்ட துணைக் கணக்காயர் ஒருவரை மறுபடியும் நியமிக்க வேண்டும் என்பதும் ஒன்று அல்லவா? எனவே, அந்த உத்தியோகத்தில் பழைய நபரையே நியமித்துக்கொள்ள நிர்வாகத்தினர் சம்மதிக்கும்போதுதான் வேலைநிறுத்தம் வாபஸ் பெறப்பட்டுக் கம்பெனி திறக்கப்படலாம். அப்படி ஒரு சமரச ஒப்பந்தம் ஏற்பட்ட பின் அந்த உத்தியோகத்துக்குப் புதிய ஆள் தேவை இராதே!

ஒருகால் வேலையிலிருந்து நீக்கப்பட்ட அந்த நபரை மீண்டும் அமர்த்திக்கொள்வதைத் தவிர மற்றக் கோரிக்கைகளையெல்லாம் கம்பெனி நிர்வாகத்தினர் ஏற்றுக் கொள்வதாகச் சொல்லி, வேலைநிறுத்தம் செய்திருக்கும் தொழிலாளர்களும் அதற்கு உடன்பட்டு வேலைக்குத் திரும்பினால் அந்த உத்தியோகத்துக்குப் புதிய ஆள் ஒருவர் தேவைப்படலாம். ஆனால் அந்தப் பதவிக்கு எத்தனை பேர் மனுச் செய்திருக்கிறார்களோ! எவ்வளவு பேர் நேர்முகப் பேட்டிக்கு அழைக்கப் பட்டிருப்பார்களோ! இப்பொழுதே கடுமையானதொரு போட்டி இருப்பது தெரிகிறது: அதாவது, திருமலை அந்தப் பேட்டிக்குப் போட்டியாக வரவிருக்கிறான்.

எனினும் இது ஒரு பெரிய விஷயமல்ல. காரணம், அந்தக் கம்பெனியின் டைரக்டர்களில் ஒருவராக இருக்கும் வேதமூர்த்தியிடம் நரசு ஒரு வார்த்தை சொன்னால் போதும்; உடனே அந்த உத்தியோகத்தில் அவனை உட்கார வைத்து விடுவார்.

ஆனால் அவரிடம் இனி அப்படிச் சொல்ல முடியுமா? நேற்றிரவு அவர் இவனது இண்டர்வியூ சம்பந்தமாய்க்

ஞானக்குயில் · ஜெகசிற்பியன்.



கேட்டபோது அவருடைய கம்பெனியில் இவன் வேலை தேடி வந்திருக்கும் விஷயத்தை அடியோடு மறைத்து விட்டானே!

இவன் ஏன் அவரிடம் அவ்விவரத்தைச் சொல்லாமல் மறைத்தான்? தன் தந்தையின் நெருங்கிய நண்பர் ஒருவர் சம்பந்தப்பட்ட கம்பெனியில் தான் உத்தியோகம் பார்ப்பது தனக்கும், தனது குடும்பத்துக்கும் அகௌரவமானது என்ற தன் முனைப்பான எண்ணத்தில் அவ்வாறு சொன்னானா?

இல்லை. நேற்று எதிர்பாராத விதமாகத் தன் நண்பன் திருமலையைச் சந்தித்து, அந்தக் கம்பெனியில் தான் விண்ணப்பித்திருக்கும் அதே உத்தியோகத்துக்கு அவனும் முயற்சி செய்கிறான் என்பதைத் தெரிந்து கொண்டதோடு, கடந்த ஓராண்டாக அவன் வேலையின்றிப் படும் கஷ்டங்களையும் அறிந்ததால் இவனுடைய மனம்



ஒரேயடியாகக் கரைந்து குழைந்து போயிற்று. அதனால் அப்போதே தன் நண்பனுக்குப் போட்டியாகத் தான் இனி நில்லாமல் ஒதுங்கிக் கொள்வது எனத் தீர்மானித்துக் கொண்டான். அத்துடன், அவனைப் பற்றி வேதமூர்த்தியிடம் சொல்லி அவரது சிபாரிசில் எப்படியும் அவனுக்கு அந்த உத்தியோகம் கிடைக்குமாறு செய்துவிட வேண்டும் என்றும் முடிவெடுத்துக் கொண்டான்.

இளமை முதற்கொண்டே இத்தகையதொரு குணம் அவனுடைய இரத்தத்திலேயே ஊறிப் போய்விட்டிருந்தது. எதுவொன்றாயினும்—தனக்கு அது எவ்வளவு அவசிய அவசரத் தேவை என்றிருந்தாலும் — அதுவே தன்னைவிட மற்றவருக்கு அதிகத் தேவையாக அவனுக்குத் தோன்றிவிட்டால் சற்றும் தயங்காமல், கொஞ்சமும் முன்பின் யோசியாமல் அந்தக் கணமே அதனை விட்டுக் கொடுத்து விடுவான்; அல்லது எடுத்து வழங்கி விடுவான். இதுபற்றி அவனே பல முறை சிந்தித்திருக்கிறான்: 'உண்மையில் இது என்னிடமுள்ள நல்ல குணமா? இரக்கம், தியாகம் என்னும் வகைகளைச் சேர்ந்ததுதானா? அல்லது என் புத்திப் பலவீனத்தால் செய்யும் இளிச்சவாய்த் தனமான காரியமா? இயற்கையிலேயே நான் ஒரு கோழையாய் இருப்பேனோ? அதனால்தான் எதையும் எவருக்கும் எளிதில் விட்டுக் கொடுத்து விடுகிறேனோ? இப்படியே எல்லா விஷயங்களிலும் நடந்து கொண்டு போனால் என் எதிர்காலம் என்னவாகும்? எதற்கும் உபயோகமில்லாதவனாய், எதிலும் உருப்படாதவனாய், பிழைக்கத் தெரியாதவனாய் ஒதுங்கி உட்கார்ந்து விடுவேனோ?' இவ்வாறெல்லாம் தீவிரமாகச் சிந்தித்துத் தன்னிடமுள்ள அந்தக் 'குறை'யைத் தவிர்த்துக் கொள்ள வேண்டும் என்று அவன் எத்தனையோ தடவைகள் தீர்மானித்தாலும், அடுத்து அம்மாதிரி ஒரு சந்தர்ப்பம் ஏற்படும்போது பழையபடியே நடந்து கொள்வான்.

நேற்றும் அப்படித்தான் தன் நண்பன் திருமலைக்காக, தான் இவ்வளவு தூரம் தேடி வந்த ஒரு வேலை வாய்ப்பை விட்டுவிடுவது என்று தீர்மானித்ததோடு, அம்முயற்சியில் மேலும் ஈடுபட முடியாதபடி அது சம்பந்தப்பட்ட வேதமூர்த்தியிடம் அவனே விஷயத்தை மாற்றி 'மறைத்துச் சொல்லி விட்டான். எனவே, பைப் பாரத் என்ற அந்தக் கம்பெனியை இனி அவன் அடியோடு மறந்துவிட வேண்டியதுதான். இந்த நிலையில் அவனுடைய மனம், 'ஊருக்குத் திரும்பிப் போய்விடலாமா?' என்பதைத் தவிர வேறு என்ன நினைக்கக் கூடும்? —

நரசு வேகமாகத் தலையாட்டிக் கொண்டான்: 'ஊருக்குப் போவதா? வீட்டை விட்டுக் கிளம்பிய சமயம் என் அம்மாவிடம் என்ன சொன்னேன்? வழக்கம் போல் இம்முறையும் வேலை கிடைக்கவில்லையானால் திரும்பி ஓடி வந்துவிட மாட்டேன்; இப்போது போவது சென்னைப் பட்டணமாகையால் அங்கேயே சில காலம் தங்கியிருந்து எப்படியும் ஒரு வேலையைத் தேடிக் கொள்ள முயற்சி செய்வேன்





என்று ரொம்பவும் வீராவேசமாகச் சூளுரைக்கவில்லையா? அப்படிச் சொல்லி விட்டு நாலாம் நாளே பெட்டியும் கையுமாய் அங்கு போய் நின்றால், அம்மா என்ன நினைப்பாள்? அவளுக்கு நான் வீடு வந்து சேர்ந்ததே பெரிய சந்தோஷமாகிவிடும் என்றாலும் அக்கம் பக்கத்தில் இருப்பவர்கள் சிரிக்கமாட்டார்களா ?'

வெளியே, காம்ப்வுண்ட் கேட் திறக்கப் படும் 'கிங்' என்ற ஒலி கேட்டுச் சன்னல் வழியாக எட்டிப் பார்த்தான் நரசு.

அந்தக் 'கேட்'டுக்கும் வீட்டுக்கும் நேரே அமைந்த சிமெண்ட் பாதையில் ஒரு கிழவனும், இளம் பெண்ணொருத்தியும் தயங்கித் தயங்கி உள்ளே வந்தனர். ராயப்பனும் சுகந்தியும்தான் அவர்கள்!

சிவப்புக் கரை போட்ட கறுப்புச் சேலை, 'கப்' வைத்துத் தைக்கப் பெற்ற முழுக் கை ரவிக்கை, முன்றானைத் தலைப் பால் முக்காடு — என்றிந்தக் கோலத்தில் விளங்கிய அந்தப் பெண்ணை ஆச்சரியத்தோடு பார்த்தான் நரசு. அதற்குள் அவளும் அந்தக் கிழவனும் வீட்டு வராந்தாவில் ஏறிவிட்டனர்.

'சரிதான்; பெரிய மனிதரான வேதமூர்த்தியிடம் ஏதாவது உதவி கேட்கவோ, சிபாரிசுக் கடிதம் வாங்கவோ அவர்கள் வந்திருப்பார்கள்' என்று எண்ணி அதோடு தன் கவனத்தைத் திருப்பிக் கொண்டான் நரசு.

இரவெல்லாம் தூங்காமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்துவிட்டு விடியற்காலை எழுந்ததிலிருந்து இந்நேரம் வரை ஏதேதோ சிந்தனைகளில் ஆழ்ந்து உட்கார்ந்திருந்ததால் அவனது உடலும் உள்ளமும் வெகுவாகச் சோர்வடைந்துவிட்டன. இனியும் அந்த அறைக்குள் அடைந்து கிடக்கப் பிடிக்காமல், எங்காவது காலாறப் போய்ச் சுற்றிவிட்டு வரலாமே என்று எண்ணினான். மறு கணமே, திருமலையின் வீட்டுக்குப் போய் அவனுடைய தங்கை கண்ணம்மா கிடைத்துவிட்டாளா என்று அறிந்து வர வேண்டும் என்ற ஒரு திடீர் முடிவுடன் அவசரமாக எழுந்து வெளியே கிளம்ப ஆயத்தமானான்.

வராந்தாவில் வந்து நின்று கொண்டிருந்தவர்களிடம் மனோகரி ஏதோ விசாரிக்கும் பேச்சுக் குரல் கேட்டது.

பத்து நிமிடங்களில் வேறு உடை தரித்துக் கொண்டு அறையைவிட்டு வெளியே வந்தான் நரசு. வராந்தாவின் ஓரத்தில் அந்தக் கிழவன் மட்டும் ஒதுங்கி நின்று கொண்டிருந்தான். அவனோடு வந்த பெண்ணைக் காணோம். ஒருவேளை மனோகரி அவளைத் தன் தந்தையிடம் பேச மாடிக்கு அழைத்துச் சென்றிருக்கலாம்.

தான் வெளியே போவது பற்றி யாரிடமாவது சொல்ல வேண்டுமா என்ற யோசனையுடன் ஒரு கணம் தயங்கி நின்றான். வெளியில் போகும்போதெல்லாம் சொல்லிக் கொண்டு போவது என்னும் வழக்கத்தை ஏற்படுத்தினால் அதுவே பல தர்மசங்கடங்களுக்கு வழிகோலி விடும் என்று எண்ணிச் சரேலெனப் புறப்பட்டுவிட்டான்.

**கா**ம்பவுண்ட் 'கேட்'டைத் திறந்து கொண்டு தெருவில் இறங்கிய அவன் தன் ஜேபியிலிருந்து ஒரு துண்டுக் காகிதத்தை எடுத்துப் பிரித்துப் பார்த்தான். அது நேற்று திருமலை தன் வீட்டு விலாசத்தை எழுதிக் கொடுத்த காகிதம். அவ்விலாசத்தை நரசு தனது டைரியில் அப்போதே குறித்து வைத்துக் கொண்டதால் — அந்த டைரியும் இப்போது அவனுடைய ஜேபியில் இருந்ததால்—'இனி இது தேவையில்லை' என்று கருதிக் கசக்கிக் கீழே எறிந்துவிட்டு மேலே நடந்தான்.

அதே சமயம், அந்த வீட்டு மதில் சுவர் ஓரம் இருந்த ஒரு வேப்ப மரத்தடியில் நின்று கொண்டிருந்த பெண்ணொருத்தி அவனைப் பார்த்துவிட்டுச் சட்டென்று அப்படியே தரையில் உட்கார்ந்து தலை குனிந்து கொண்டாள். அவள் வேறு யாருமல்ல, கண்ணம்மாதான் !

கன்னிகா மடத்துத் தோட்டக்காரனான ராயப்பன் முதலில் சுகந்தியை வேதமூர்த்தியிடம் ஒப்படைத்துவிட்டுப் பிறகு இவளை எழும்பூர் ஸ்டேஷனுக்கு அழைத்துப்போய் மாயூரத்துக்கு ஒரு டிக்கட் வாங்கிக் கொடுப்பதாகச் சொல்லி இவ் வீட்டுக்கு வெளியே நிற்க வைத்து விட்டு உள்ளே போயிருக்கிறான் போலும்.

அவனுக்காகக் காத்து நின்ற கண்ணம்மா சிறிதும் எதிர்பாராதவிதமாய் இங்கு நரசுவைக் கண்டு அளவுகடந்த வியப்பும் திகைப்பும் அடைந்தாள். அத்துடன் ஏதோ பெரும் புதையல் கிடைத்த மாதிரி மகிழ்ச்சித் திணறலுக்கும் உள்ளானாள். மறுகணமே, பரபரப்புடன் தன்னை ஏற இறங்கப் பார்த்துக் கொண்ட அவள், 'ஐயோ! பிச்சைக்காரியைவிட மோசமான இந்தக் கோலத்தில் இருக்கும் என்னை அவர் பார்த்தால் என்ன நினைப்பார் ? நான் தான் அவர் எதிரில் எப்படிப் போய் நிற்பேன் ?' என்று நினைத்த மாத்திரத்தில் அவமானம் மேலிட உடல் கூசிக் குறுகி அப்படியே தரையில் உட்கார்ந்து

இன்றைய முன்னணி பிரபல

# பழனி டாக்டர் எஸ். காளிமுத்து

R.M.P. (Ind.) V.V.C., A.M.I.H.

**அவர்களின் விஜயம்**



**சந்திக்கும் விலாசங்கள் :**

**1-ந் தேதி திருநெல்வேலி :** *நெல்லை லாட்ஜ் காலை 8 மணி முதல் 12 மணி வரை*

**1-ந் தேதி நாகர்கோவில்:** *உடுப்பி ஸ்ரீகிருஷ்ண பவன், மாலை 2 மணி முதல் 4 மணி வரை*

**2-ந் தேதி மதுரை :** *மணீஸ் கபே, காலை 8 மணி முதல் மாலை 2 மணி வரை.*

**2-ந் தேதி புதுக்கோட்டை:** *வஸந்தா லாட்ஜ், மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை.*

**3-ந் தேதி காரைக்குடி :** AVM. PL. *ரெஸ்ட் ஹவுஸ், காலை 8 மணிமுதல் 11 மணிவரை.*

**3-ந் தேதி அறந்தாங்கி :** *கோகுலம் லாட்ஜ். பகல் 12 மணி முதல் 1 மணி வரை.*

**3-ந் தேதி பட்டுக்கோட்டை:** *அசோகாலாட்ஜ் பகல் 2 மணி முதல் 3-30 மணி வரை.*

**3-ந் தேதி மன்னார்குடி :** *மல்லை லாட்ஜ், மாலை 4-30 மணி முதல் 6 மணி வரை.*

**4-ந் தேதி திருச்சி :** *ஹோட்டல் அஜந்தா காலை 8 மணி முதல் 2 மணி வரை.*

**4-ந் தேதி கரூர் :** *பெரியார் உணவு விடுதி, மாலை 3-30 முதல் மாலை 5 மணி வரை.*

**5-ந் தேதி தஞ்சை :** *ராஜா ரெஸ்ட் ஹவுஸ், காலை 8 மணி முதல் பகல் 12 மணி வரை.*

**5-ந் தேதி திருவாரூர் :** *அபூபக்கர் பில்டிங், மாலை 2 மணி முதல் 4 மணி வரை.*

**5-ந் தேதி நாகை :** *இலகர விலாஸ், மாலை 5 மணி முதல் 7 மணி வரை.*

**6-ந் தேதி காரைக்கால் :** *அசோக் லாட்ஜ், காலை 8 மணி முதல் 10 மணி வரை.*

**6-ந் தேதி கும்பகோணம் :** *தாஜ்மஹால் லாட்ஜ், காலை 11 முதல் 2 மணி வரை*

**6-ந் தேதி மாயவரம் :** *காளியாகுடி லாட்ஜ். மாலை 3 மணி முதல் 4-30 மணி வரை.*

**6-ந் தேதி கடலூர் N. T.:** *ஹோட்டல் பிருந்தாவனம். இரவு 7 முதல் 8-30 வரை.*

**7-ந் தேதி பாண்டிச்சேரி :** *அருணா லாட்ஜ், காலை 8 மணி முதல் 10 மணி வரை.*

## பழனி சித்தர் வைத்தியசாலை

போன்: 316] பழனி [தந்தி: சித்தர்

---

## நினைத்த உடன் தயார் — இனி, மேலே வாசியுங்கள்!

ஸ்ரீ கணேஷ்ராம்ஸ்

'திடீரெக்ஸ்'

"Dhideerex"

(FOR INSTANT PREPARATION)

'திடீர்'




(REGD.)

**(1) மிளகு மசாலா** *(மிளகு ரசம்)*

**(2) தக்காளி மசாலா** *(தக்காளி சூப்)*

**நல்ல ஜீரண சக்தியும் பசி எடுக்கவும்** இவ்விரண்டும் வெஜிடபின் புரதங்கள் நிறைந்து விளங்குவதால் உங்களுக்கு நல்ல தெம்பளிக்கக் கூடியது. 114, 225 & 454 கிராம் பாட்டில்களில் கிடைக்கும்.

**திடீர் புளியோதரை பவுடர்**

வடித்த சாதத்தில் திடீர் புளியோதரைப் பவுடரைக் கலந்து நல்லெண்ணெயும் உப்பும் சேர்த்தால் பெருமாள் கோயில் புளியோதரை ரெடி.

**திடீர் அரிசி சேவை (சேமியா) மிக்ஸ்**

—கொதிக்கும் தண்ணீரில் கலந்ததும் ரெடி. **குறிப்பு :** மேற்சொன்ன தயாரிப்புகளனைத்தும் அசல் தயாரிப்புகளுக்கு ஈடான ருசியுடன் இருப்பது நிச்சயம்.

**திடீர் கருவேப்பிலை பவுடர்**

வடித்த சாதத்தில் திடீர் கருவேப்பிலை பவுடரையும் நெய்யும் கலந்து சாப்பிடவும். இட்லி, தோசை போன்ற பலகாரங்களுக்குச் சட்னியாகவும் உபயோகிக்கலாம்.

**ஜாதிக்காய்** கலவையுடன் கூடிய **எமது புதிய ஊறுகாய்கள்**

ஜாதிக்காய் கூட்டு சேர்த்து தயாரித்த மாங்காய், எலுமிச்சை மற்றும் குறுத்து இஞ்சி முதலியவைகள் நாவிற்கினியது— நலமிக்கது! இவை எண்ணெய் அல்லது உப்புடன் தனித் தனியே கிடைக்கும்.

— தயாரிப்பாளர்கள் —

**M/s. R. S. N. அய்யர் & R. S. G. அய்யர்**

— உரிமையாளர்கள் —

## ஸ்ரீ கணேஷ்ராம் & கோ.

46, தம்புச் செட்டி தெரு, சென்னை-1

(போன் : 20401)

*தயாரிப்பு முறைகளை உருவாக்கியவர்கள்:*

**ஸ்ரீ கணேஷ்ராம்ஸ்**

**அனலிட்டிக்கல் லாபரேட்டரீஸ், சென்னை-1**



# ஸ்வப்னம்

காதலிருவர் கருத்தொருமித்து.... இல்லை, இல்லை; காதலொருவர் கருத்திருமித்து இன்பம் காண முயலும் துன்பக் கதை, ஸ்வப்னம். இப்படிக் காதல் பொங்கும் கனவாகும் கதை புதிதல்ல. என்றாலும் கேசவதேவ் புது மெருகு கொடுத்துத் தீட்டியிருக்கிறார்.

கல்லூரி மாணவி கௌரி (நந்திதாபோஸ்) கவிஞன் பிந்து (சுதீர்) வின் கவிதைகளில் மட்டுமல்ல; கவிஞனிடமே மனத்தைப் பறிகொடுத்துவிடுகிறாள். கவிச் செல்வமிருந்தாலும் கையில் காசு இல்லாதவனுக்குப் பெண்ணைக் கொடுக்க யாருக்குத் தான் மனம் வரும்?

கௌரியின் தந்தை சாடவும், பணத்தோடு வருவதாகப் பிந்து போகவும், தந்தை இறந்தபின் தன்னைச் சேர்ந்தவர்கள், விரும்பாத ஒருவனைத் திருமணம் புரிந்து கொள்ளத் தூண்டவும், இல்லாத இன்னல்களுக்கு இலக்காகி, கௌரி வீட்டை விட்டு வெளியேறுகிறாள். விசுவம் (மது) என்னும் கண்டிராக்டரின் கார் மட்டுமின்றி, அவன் வீடே அவளுக்கு இடம் அளிக்கிறது. விசுவத்தின் மனத்தில் அவள் இடம் பெறும் நேரத்திலே, வசுமதி (ரமணி சந்திரா) மூலம் அவள் இதயம் தெரிகிறது. இதற்கு 'ஃப்ளாஷ் பாக்' உத்தி உதவுகிறது. ஆம், இங்கு எழுதியதற்கு மாறாக முந்திய கதையைப் பிந்தித் தான் கூறுகிறது திரைப் படம்.

போனவன் போனவன்தான் என்று நினைக்கும் வேளையிலே பிந்து, பெரும் பணக்காரனாகி, விசுவத்தின் மூலமே மாளிகை கட்டிக் கொண்டு திரும்பி வருகிறான். கனவு கலைகிறது. பிந்துவின் உயிருக்கே உலை வைத்துவிட்டு! கதைத் தொடக்கத்தில் கௌரிக்கு இடம் கொடுக்கத் திறந்த விசுவத்தின் கார்க்கதவு மீண்டும் ஒரு முறை திறந்துகொள்ளுகிறது.

மலையாள மண்ணின் இயல்பு கதையில் தெரிவதால், சென்னைத் தேடி ஓட வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. நந்திதாபோஸ் குறைவாகப் பேசி நிறைவாக நடிக்க முயன்றிருக்கிறார். உதட்டு அசைவுகள் மட்டும் உள்ளத்தைக் காட்டி, உணர்ச்சியைக் கொட்டும் வகையில் அமையவில்லை. மதுவின் பேரில் குற்றமில்லை; இதுபோன்ற பாத்திரங்களில் நடித்து நடித்துப் பழகிவிட்ட நடிப்பு! காருக்குக் கால்மணி, கால் நடைக்குக் கால்மணி, கைதட்டலுக்குக் கால் மணி என்று மணியான பல நிமிஷங்கள் செலவிடப்பட்டிருக்கின்றன. இதுவே யதார்த்த வாதம் என்றால் அது வெறும் ஸ்வப்னமே!

தன் கையிலிருந்த துணிப் பையால் முகத்தை மறைத்துக் கொண்டாள்.

நாக அவள் இருந்த பக்கம் திரும்பவில்லை. ஏதோ யோசனையில் ஆழ்ந்தவனாய் அவ்விடத்தைக் கடந்து மேலே நடந்து கொண்டிருந்தான் அவன்.

கண்ணம்மா மேலே எழுந்து நின்று மரத்தடியில் மறைந்தவாறு திரும்பிப் பார்த்தாள். அவள் மனம் பரபரத்தது. கால்கள் அவனை நோக்கி ஓடத் துடிதுடித்தன. 'அவர் என்னைப் பார்த்திருப்பாரோ? இவ்வளவு பெரிய பங்களாவில் வந்து தங்கியிருப்பதால் இந்தப் பராரிக் கோலத்தில் இருக்கும் என்னோடு நின்று பேசுவது தம் கௌரவத்துக்கு இழுக்கு — இவ்வீட்டார் யாரேனும் கண்டுவிட்டால் அசிங்கமாகும் — என்று எண்ணி என்னைப் பார்த்தும் பாராதவர் போல் அவர் போகிறாரோ?'

தன்னுள் திடுமெனக் கிளர்ந்த ஒரு தாழ்வு உணர்ச்சியால் உடல் குன்றிக் குறுகிய அவளுக்கு அழுகை அடைத்துக் கொண்டு வந்துவிட்டது. உடனே வேகமாகத் தலையாட்டியபடி, 'இல்லை; என்னை அவர் பார்த்திருக்க மாட்டார். பார்த்தும் பார்க்காத மாதிரி போகக் கூடிய அவ்வளவு சின்னப் புத்திக்காரர் அல்ல அவர். அப்படிப்பட்டவராயிருந்தால் அன்றிரவு ரயிலில் டிக்கட் இல்லாமல் அவஸ்தைப்பட்ட என்னிடம் அவ்வளவு பெருந்தன்மையோடு நடந்து கொள்வாரா?' என்று நினைத்த அவள் சற்றே தெம்பும் தைரியமும் அடைந்தாள். 'ஓடிப் போய் அவர் எதிரே நிற்கலாமா? இந்தப் பாழாய்ப் போன பட்டணத்துக்குத் தெரியாத கேடாய் நான் வந்துவிட்டுப் படும் பாட்டையெல்லாம் அவரிடம் சொல்லலாமா? சொன்னால் நிச்சயமாய் என் அம்மாவிடம் என்னைக் கொண்டு போய்ச் சேர்க்க அவர் உதவி செய்வார்.'

நாக அந்தத் தெருவின் இறுதி முனையைக் கடந்து மெயின் சாலையிலும் ஏறித் திரும்பிவிட்டான். மகிழ்ச்சிப் பரபரப்புடன் அவனை நோக்கி ஓட நாலடி எடுத்து வைத்த கண்ணம்மா ஏதோ ஒன்றால் கால் இடறப்பட்டவள் போல் கீழே விழாத குறையாகத் தட்டுத் தடுமாறி நின்றாள். 'சே! நானே அவர் முன் எப்படிப் போவேன்? போனபின், நீ யார் என்று கேட்டுவிட்டால் என்ன பதில் சொல்வேன்?'

பெண்மைக்கே உரிய தன்மான உணர்ச்சி பொங்கிக் குமுறி அவளை மேலே செல்லவிடாமல் பின்னுக்கு இழுத்தது. வாடிய கொடி போல்

# மழக்காரு

"அக்காளுக்குக் குழந்தை இல்லா விட்டால் என்ன? நான் பெற்றுத் தருகிறேன்!"

மழலைச் செல்வம் இல்லாத குறையைத் தேக்கி நிற்கும் தம்பதிகளைச் சுற்றிப் படரும் இக்கதையின் நாயகி சாந்தாதான் என்று நம்பும் அளவுக்கு அந்தப் பாத்திரத்தை ஏற்று நடித்திருக்கிறார் சோபனா. ஆரம்பத்தில் விளையாட்டும் வெகுளியும் காட்டித் துடிப்போடு நடிக்கிறார். இறுதியிலோ உணர்ச்சி பிம்பமாக வாழ்ந்து வாழ்வையே முடித்துக் கொள்கிறார். இப்படி ஓர் அமங்கல முடிவினால் தாம் ஏற்ற பாத்திரத்தை உயிர் வாழ வைக்கிறார்.

கேரளத்துக் கலைகளைக் காட்டவும், மந்திரமாயங்களைச் சித்திரிக்கவும் இக்கதை நாட்டுப்புறச் சூழலில் சித்திரிக்கப்படுகிறது.

பிரபாகரன் நாட்டுப்புறத்துக் குடியானவன். மழலைச் செல்வத்துக்காக ஏங்கி நிற்பவன். எத்தனையோ நேர்த்திக் கடன்களுக்குப் பின்னரும் எண்ணம் ஈடேறாமற் போகவே, மனைவியோடு பழகுவதில் அலட்சியம் காட்டுகிறான். இந்த அலட்சியத்தை அநாயாசமாகக் காட்டுகிறார் மது. பிரபாகரனுக்குத் தந்தையாக வரும் கொட்டாரக்கராவும் நடிப்பை நடிப்பாகக் காட்டாமல் வாழ்ந்தே காட்டி விடுகிறார்.

தாய் வீட்டுக்குப் போன பொழுதுதான், ஆரம்பத்தில் கூறிய சாந்தாவின் சொற்கள் மாலதியைச் சிந்திக்க வைக்கின்றன. தன் கணவனுக்குத் தன் தங்கை சாந்தாவையே மணம் முடித்து வைக்கத் திட்டமிடுகிறாள்.

தன் தமக்கையின் ஆசையை நிறைவேற்றத் தன் காதலைத் துறந்து பிரபாகரனை மணந்து கொள்கிறாள் சாந்தா. காதலையும் கடமையையும் எண்ணிப் பெருமூச்செறிந்து புரண்டு படுக்கும் காட்சியில் நெக்குருக வைக்கிறார் நடிகை சோபனா. இறுதியில் தம்பதிகளை இணைத்துவிட்ட திருப்தியோடு காரியம் சமைத்துக் கொண்டுவிடுகிறாள் சாந்தா.



குறைகளைக் குறைத்து, நிறைகளை நிறையக் காட்டும் இப்படத்தில், நடிகர்கள் அனைவருமே தம் பங்கை நல்ல முறையில் நிறைவேற்றியிருக்கின்றனர் என்றாலும், மீனாட்சியாக வரும் சரோஜா, சாமியாராக வரும் சங்கரடி ஆகியவர்கள் குறிப்பிடப்பட வேண்டியவர்கள். மண் வளத்தோடு மன வளத்தைக் கூட்டி மழை வளம் காட்டும் படம் மழக்காரு.

— ரா. வீ.

துவண்டு தள்ளாடியவாறு அந்த வேப்ப மரத்தடிக்கே திரும்பி வந்து நின்று கொண்டாள். அவளது கண்களில் கண்ணீர் சுரந்து ததும்பியது. நரசு சென்ற திசையை நிமிர்ந்து நோக்கினாள். ஒன்றும் புலனாகவில்லை. உலகம் முழுதுமே வெள்ளப் பெருக்கில் ஆழ்ந்துவிட்டாற்போல் எங்கும் ஒரே தண்ணீர் மயமாய் அவளுக்குத் தென்படலாயிற்று.

சில நிமிடங்கள் வரையில் உணர்விழந்து சிலையாய் நின்றிருந்த அவள் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு மதில் சுவர் ஓரம் போய்க் குதிகால்களை உயர்த்தியபடி உள்ளே எட்டிப் பார்த்தாள். இந்தச் சமயம், சற்றுமுன் நரசு தெருவில் கசக்கிச் சுருட்டி எறிந்து விட்டுப் போன அந்தத் துண்டுக் காகிதச் சுருளை காற்றில் உருண்டு கொண்டே வந்து அவளது வலக் கால் பாதத்தின் அடியில் நின்றது. ஆமாம்; அவளின் சகோதரனை திருமலை குடியிருக்கும் வீட்டு விலாசம் எழுதப் பெற்றிருந்த காகிதம்தான் அது!

உள்ளே வராந்தாவில் நின்றிருந்த ராயப்பன் யாரிடமோ ஏதோ சொல்லிவிட்டு அவசரமாகத் தெருவை நோக்கி வந்து கொண்டிருந்தான். அவன் வருவதைக் கண்ட கண்ணம்மா உயர்த்தியிருந்த குதிகால்களைப் படிய வைத்து நின்று கொண்டு காம்பவுண்ட் கேட் பக்கம் ஆவலோடு பார்வையைச் செலுத்தினாள். இப்போது அந்தக் காகிதச் சுருளை அவளது காலடியில் நசுங்கிக் கொண்டிருந்தது.

'கன்னிகா மடத்துப் பெண்ணை இவ் வீட்டாரிடம் ஒப்படைத்துவிட்டு இதோ வருகிறார் இந்தக் கிழவர். இனி இவரோடு நான் எழும்பூர் ஸ்டேஷனுக்குப் போக வேண்டும். அங்கே மாயவரத்துக்கு டிக்கட் வாங்கிக் கொடுத்து ரயிலேற்றி விட்டு விடுவார். அப்புறம் பழையபடி என் மாமா வீட்டு வாசலில் போய் நிற்க வேண்டும். மாமாவும், அத்தையும், அவர்களுடைய பிள்ளைகளும் என்னை வீட்டில் சேர்ப்பார்களா? சேர்த்தாலும் ஆளுக்கொரு கேள்வி, வேளைக்கொரு ஏச்சு, பேச்சு, சித்திரவதை என்று உருட்டிப் புரட்டி எடுத்துவிடுவார்கள். அதோடு விஷயம் தீர்ந்து போகுமா? அக்கம் பக்கத்தில் இருப்பவர்கள் நக்கலாகவும், நைச்சியக் கிண்டலாகவும் இழித்தும் பழித்தும் பேசுவார்களே!....'

மகிழ்ச்சிச் சுறுசுறுப்புடன் தெருவுக்கு வந்த ராயப்பன், "அம்மா,

குழந்தே! உன்னை இந்த வீட்டுக்காரங்க கூப்பிடுறாங்க, வாம்மா!'' என்றான் முகமெல்லாம் சிரிப்பாக.

இதைக் கேட்டுத் திகிலும் திகைப்பும் அடைந்த கண்ணம்மா, ''என்னையா, தாத்தா?'' என்று சந்தேகத்துடன் கேட்டாள்.

''ஆமாம்மா! எங்க மடத்துப் பெண் இந்த வீட்டுக்கார ஐயாவின் மகளிடம் உன்னைப் பற்றி என்னமோ சொன்னது. உடனே அவங்க என்கிட்ட வந்து உன்னை உள்ளே அழைச்சுக்கிட்டு வரச் சொன்னாங்க.''

''வேணும், தாத்தா! எனக்குப் பயமாயிருக்குது. நாம் இப்படியே போயிடலாம். நீங்க முதல்லே சொன்ன மாதிரி தயவுபண்ணி என்னை ரயிலேற்றிவிட்டு விடுங்க. உங்களுக்குக் கோடி புண்ணியமாகும்.''

''பயப்படாதே, குழந்தே! நீ ரொம்பப் பசிக் களைப்பாயிருக்கிறேன்னு அந்தப் பெண் சொல்லியிருக்கும்; எதனுச்சும் சாப்பிடக் கொடுக்கக் கூப்பிடுறாங்கன்னு நினைக்கிறேன்.''

''ஊஹூம்; எனக்குப் பசிக்கலே, தாத்தா!''

''சும்மா சொல்லாதேம்மா! இங்கிருந்து ரயிலடிக்கு ரொம்பத் தூரம் நடக்கணும். உன்னால் நடக்க முடியாது. என்னாலே உன்னை பஸ்ஸில் அழைச்சுக்கிட்டும் போக முடியாது. ரயில் டிக்கட்டுக்கு மாத்திரம்தான் பணம் வைச்சிருக்கிறேன். அதுவும் பத்துமோ, பத்தாதோ; அங்கே போய் விசாரிச்சாத்தான் தெரியும். அதனாலே தானம்மா சொல்றேன். நடக்கிறதுக்காவது உடம்பிலே கொஞ்சம் தெம்பு வேணுமா?.... அதோ பார், அந்தப் பிள்ளை வராந்தாவில் நின்னு நம்மைப் பார்த்துக்கிட்டு இருக்குது!''

கண்ணம்மாவுக்கு இனியும் அவனிடம் எப்படி மறுத்துப் பேசுவது என்று தெரியவில்லை. அச்சத்தாலும் வெட்கத்தாலும் அவள் உடல் நடுங்கியது. தன் தலைவிதியை எண்ணி நொந்தபடி ராயப்பனோடு அவ் வீட்டுக் காம்பவுண்டினுள் புகுந்து நடந்தாள்.

புழுதி படிந்த தங்க விக்கிரகம் உயிர் பெற்று நடந்து வருவதுபோல் தலை குனிந்து தயங்கித் தயங்கி வந்து வாசற்படியோரம் நின்ற கண்ணம்மாவையே கண் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த மனோகரி, ''உன் பேர் என்ன?'' என்று கேட்டாள்.

தலை குனிந்து நின்ற கண்ணம்மா ராயப்பன் பக்கம் திரும்பினாள். ''உன் பேரைக் கேட்கிறாங்க, சொல்லம்மா!'' என்றான் ராயப்பன் புன்முறுவலுடன்.

''என் பேர் கண்ணம்மா....''

மெல்லச் சிரித்துக்கொண்ட மனோகரி, ''மாயவரத்திலிருந்தா வருகிறே?'' என்று குரலில் பாசமும் பரிவும் இழையக் கேட்டாள்.

''ஆமாங்க்கா!''

எடுத்த எடுப்பிலேயே அவள் 'அக்கா' உறவு போட்டுப் பதிலிறுத்ததைக் கேட்ட மனோகரிக்குச் சிரிப்பு வந்துவிட்டது. ''மாயவரத்திலே மதுரம் என்கிற ஒரு மச்சரம்மாவை உனக்குத் தெரியுமா?''

திடுக்குற்றவள்போல் நிமிர்ந்த கண்ணம்மா அவளைத் திருதிருவெனப் பார்த்துவிட்டு, ''தெரியாது அக்கா!'' என்று குழறினாள்.

''உனக்கு அங்கே வீடு எங்கே?''

''லாக்கடத்துக்குக் கிட்ட!''

''அதாவது, கூறைநாடா?''

''ஆமாங்க்கா!''

''சரி, உள்ளே வா! மற்றதைப் பிறகு பேசுவோம்'' என்று புன்னகையுடன் சொன்ன மனோகரி, ராயப்பன் பக்கம் திரும்பி, ''இந்தப் பெண் இங்கே எங்கள் வீட்டில் இருக்கட்டும். இவளுடைய தாயார் இருக்கிற இடத்தைக் கண்டுபிடிச்சு இவளைக் கொண்டு போய்ச் சேர்க்க நாங்கள் முயற்சி செய்யறோம். அது முடியலேன்னா ஊருக்கே இவளை வண்டியேற்றி அனுப்பிச்சுடறோம்...'' என்றாள்.

வியப்பால் வாயடைத்துப் போய் நின்றிருந்த ராயப்பன், கண்களை மூடி, ''கர்த்தாவே, உமக்கு என் நன்றியறிதலான தோஸ்திரம்!'' என்று தனக்குள் மெல்ல முணுமுணுத்துவிட்டு, ''எங்க சுகந்தியம்மாக்கிட்ட சொல்லிவிடுங்கம்மா! நான் புறப்படறேன்!'' என்றான். பிறகு கண்ணம்மாவைப் பார்த்து, ''இனிமேல் உனக்கு ஒண்ணும் பயமில்லேம்மா! நான் வரட்டுமா?'' என்று கூறியவாறு பின்னால் நகர்ந்தான்.

அந்த எளிய மனிதனின் கருணை உள்ளத்தையும், கடமை உணர்வையும், பிரதிபலன் பாராது பிறருக்கு உதவ முன்வரும் உயர் குணத்தையும் எண்ணி நெஞ்சம் நெகிழ்ந்து சிலிர்த்து நின்றாள் கண்ணம்மா. ''போயிட்டு வாங்க, தாத்தா!'' என்று கூப்பிய கரங்களுடன் கண் கலங்கக் கூறினாள்.

மன நிறைவோடு ராயப்பன் அங்கிருந்து சென்றான். (தொடரும்)

# ஒப்பற்ற விம் பளபளப்பு உங்களுக்கு இப்போது 55 பைசா பேக்கெட்டிலே

நீங்கள் அறிந்த விம். பிசுக்கோ, கீறலோ,
கசடோ எதனையுமே அணுவளவும் படிய
விடாத அதே நுரைவளம், அதே அபார
சக்தி. வந்துவிட்டது இன்று கையகலப்
பேக்கெட்டிலே. துலக்கிப் பாருங்கள்
எவர்ஸில்வர் பாத்திரங்களை—
ஒரே ஒரு பேக்கெட் விம்,
நூற்றுக்கு மேற்பட்ட
பாத்திரங்களைப் பளிச்சிட
வைக்கும் ஒப்பற்ற
எளிமையமாக—
இத்தனைக்கும் 55
பைசாதான்.

Vim
with super foaming action
Cleans shining bright

**மாசில்லாத பளபளப்பை**
**மிளிர வைப்பது விம்**

தேர்ந்தெடுத்த
ஒரு சில நகரங்களில்
மட்டுமே கிட்டும்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்- V. 408-140 TM

# வட்ட மேஜை

சென்ற மே மாதம் கோடை விடுமுறைக்கு எனது கிராமத்துக்குச் சென்றிருந்தேன். ஓர் ஏழை விவசாயி தமக்கு நெடுங்காலமாக, குடல் புண் (Peptic Ulcer) இருப்பதைத் தெரிவித்து 'ஆபரேஷன்' செய்து கொள்ள மிகவும் பயப்பட்டுக் கொண்டு என்னிடம் வந்தார். நான் அவருக்கு ஆறுதல் கூறிப் பயத்தைப் போக்கி அருகில் உள்ள சேலம் மருத்துவ மனையில் சேர்ப்பித்தேன். ஆபரேஷன் அன்று நானும் உடனிருந்தேன். ஆனால் இரண்டு மூன்று கடைநிலை ஊழியர்கள் அவரிடம் வந்து, 'டாக்டர் பணம் கேட்கிறார்; எவ்வளவு வைத்துள்ளாய்? சீக்கிரம் எடு! அப்பத்தான் ஆபரேஷன் செய்ய முடியும்!' என்று ஏற்கனவே பயந்து போயிருந்த அவரை மேலும் மிரட்டித் தொந்தரவு கொடுக்கத் தொடங்கினர். இந்த விஷயம் எனக்கு எட்டியதும் நேரடியாக டாக்டரிடம் சென்று இதைப் பற்றிக் கேட்டேன். மிகவும் மனம் நொந்து அவர் சொன்னார்: "உங்களுக்கு இது புதுமையாக இருக்கும். ஆனால் எங்களுக்கு இது பழமையாகிவிட்டது. இப்படி டாக்டர் பெயரைச் சொல்லித்தான் இவர்கள் பணம் திரட்டுகிறார்கள். நாங்கள் ஏதாவது இதைப் பற்றி நடவடிக்கை எடுக்க ஆரம்பித்தால் மறு தினமே எம். எல். ஏ. அல்லது சேர்மேனிடம் சிபாரிசுக் கடிதம் வாங்கிவந்து விடுகிறார்கள். என்ன செய்வது?"

டாக்டர் படிப்பை மேற்கொண்டிருக்கும் எனக்கு இதைக் கேட்டபோது எப்படி இருந்திருக்கும்?

சென்னை — 10 க. அசோகன்
27–7–73 எம். பி. பி. எஸ். இறுதி ஆண்டு
கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரி.

பள்ளிப் படிப்புக்கும் கல்லூரிப் படிப்புக்கும் இத்தனை இத்தனை ஆண்டுகள் என்று கால கட்டம் வரையறையாகி இருப்பது போல் வேத போதனைக்கும் ஒரு கிரமம் இருக்க வேண்டியது அவசியம். குடந்தையில் உள்ள புகழ்கொண்ட ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் (ராஜா) வேத பாடசாலையினர் வேத போதனைக்கு அற்புதமாகக் காலப் பங்கீடு செய்திருக்கின்றனர். ஒவ்வொரு வேதத்திலும் பட்சம் தோறும் (பதினைந்து நாட்களுக்கு) எவ்வளவு மந்திரங்கள் போதிக்கலாம் என்று அநுபவ சாத்தியமாகத் தெளிவுறக் கணக்கிட்டு, ஒவ்வொரு வேதத்தையும் எட்டாண்டுகளில் பூரணமாகப் பயிலுவதற்கு விரிவான பாடக் கிரமத்தைத் தயாரித்துள்ளனர். இதனுடனேயே வடமொழிக் காவியத்திலும், மற்றும் தமிழ் — ஆங்கிலம் — கணிதத்திலும் மாணவர்களைப் பயிற்றுவிப்பதற்கும் பாடக் கிரமம் தயாரித்துள்ளனர். இதர வேத பாடசாலைகள் இந்நூலைக் கீழ்க்கண்ட முகவரிக்கு எழுதி இலவசமாகப் பெற்றுப் பயனடையலாம்; ஸ்ரீ வி. ஆர். லக்ஷ்மிகாந்த சர்மா, லலிதா பார்மஸி, காமாக்ஷி ஜோஸ்யர் தெரு, கும்பகோணம்.

சென்னை, 28–7–73 ரா. கணபதி

தற்போது நமது நாட்டில் கடலை எண்ணெய்த் தட்டுப்பாடு அதிகமாக உள்ளது.

ஒரு லிட்டர் கடலை எண்ணெய் ரூ. 8.20க்கு விற்கிறது.

அரசாங்கத்தின் தாங்கொணா வரிவிதிப்புக் கொள்கை, அர்த்தமற்ற ஆரவாரத் திட்டங்கள், லைசென்ஸ், பர்மிட், கோட்டா ஆகியவைகளின் விளைவே இந்த விலை உயர்வு.

நமது நாட்டில் சென்ற இரண்டு ஆண்டுகளில் அத்தியாவசியமான எல்லாப் பொருள்களின் விலைகளும் ஏறத்தாழத் தொண்ணூறு சதவிகிதம் உயர்ந்துள்ளது. உலகில் வேறு எந்த நாட்டிலும் காணமுடியாத விலை உயர்வு.

அரசாங்கம் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றிவிட்டது. ஒரு பயனும் காணோம்.

இந்த லட்சணத்தில், அடுத்த சில மாதங்களில் ஏறத்தாழ 20,000 டன் நிலக் கடலை ரஷ்யாவுக்கு ஏற்றுமதி செய்யப்படவிருக்கிறது. பம்பாய்த் துறைமுகத்திலுள்ள 'சல்வாட்' என்ற ரஷ்யக் கப்பலில் இந்தியாவிலுள்ள அத்தியாவசியப் பொருட்கள், வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுவதை ஆட்சேபித்து ரஷிய கப்பலில் நிலக் கடலை ஏற்றுவதைத் தொழிலாளர்கள் நிறுத்தி விட்டனர். இந்தக் கப்பலில் ஏற்கனவே 1,600 டன் சரக்கு ஏற்றப்பட்டுள்ளது. இன்னும் 600 டன் நிலக்கடலையை அந்தக் கப்பல் ரஷ்யாவுக்கு ஏற்றிச் செல்லவிருக்கிறது. தற்போது ஏற்றப்படும் நிலக்கடலை ஐம்பது சதவிகித எண்ணெய் தரக்கூடிய உயர் ரகம். (ஆதாரம்: 'தினமணி' மதுரைப் பதிப்பு, ஆகஸ்ட், 4, 1973, பக்கம் 3)

இங்கு விலை ஏற்றத்தினால் மக்கள் அவதிப்படும்போது எங்கோ நிலக்கடலை அனுப்புகிறார்களாம். மாதா வயிறெரிய மகேசுவர பூஜை நடத்துவது போலில்லையா?

கரூர்-2, 4-8-73 எஸ். ஜெயராமன்

வேலையில்லாத் திண்டாட்டத்தைக் குறைக்க அரசாங்கம் சிறந்த வழிமுறைகளைக் கையாளாமல் வீணே காலத்தைக் கழிக்கிறது.

அரசாங்கம் தொழிற்சாலைகளின் மீது விதிக்கும் வரிகளைக் குறைத்தால், அத்தொழிலகங்களின் முதலாளிகள் மிச்சமாகும் பணத்தை மறுபடியும் தொழிற்சாலையை விரிவுபடுத்தவோ, புதிய தொழில்களைத் தொடங்கவோ உபயோகிப்பர். தொழிலகங்கள் விரிவடைவதால் வேலையில்லாதோர் பலருக்கு வேலை கிடைக்க வாய்ப்புண்டு.

இப்போதுள்ள கல்வி முறை குமாஸ்தா வேலைக்கு அடிகோலுகிறதே தவிர வேறு எதற்கும் உபயோகமில்லை. எனவே, கல்விக் கூடங்களில் தொழில் முறைக் கல்வி (Job oriented Education)யைப் புகுத்துதல் வேண்டும். இக்கல்வி முறையில் தேர்வு பெறும் மாணவர்கள் வெளியில் வேலை கிடைக்காவிட்டாலும், வங்கிகளிலிருந்து கடன் வாங்கிச் சிறு தொழிற்கூடங்களை ஆரம்பிக்கலாம். இதன் மூலம் அவர்கள் தம் வேலைப் பிரச்னையைத் தீர்ப்பதுடன் வேலையில்லாத வேறு பலருக்குத் தம் தொழிற் கூடங்களில் வேலை கொடுக்கும் வாய்ப்பும் ஏற்படலாம்.

ஆதம்பாக்கம், 5-8-73 நா. வி. ராஜா

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam






# கடும் அதிவெப்பத் தேவைகளுக்கு நம்பகமானவை

## ஃபயர்க்ரீட் மற்றும் ஃபயர்க்ரீட் சூபர்

## ***ஏசிசி*** யின் காஸ்டபிள் ரிஃப்ராக்டரிகள்

எவ்வடிவத்திலும் வார்க்கலாம். எந்த அளவிற்கும் உருவமைக்கலாம். சிறு துளைகளாகவும் மற்றும் தேய்மானம் இவற்றைத் தவிர்ப்பதோடு வெப்ப அதிர்ச்சிகளையும் தாங்க வல்லவை.

1350° செ. வரையிலுமான வெப்பநிலைகளுக்கு ஃபயர்க்ரீட். 1550° செ. வரையிலுமான வெப்பநிலைகளுக்கு ஃபயர்க்ரீட் சூபர்.

வாடிக்கையாளரின் தேவைக்கு தகுந்தவாறு காஸ்டபிள் ரிஃப்ராக்டரிகள் கிடைக்கின்றன.

***ஏசிசி***—தரமான தயாரிப்புகளுக்கு நம்பகமான உத்தரவாதம்

தி அசோசியேடெட் சிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்



ACC 1010 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

ஸ்ரீலங்காவில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)

